# ஜமீந்தாரிணி



நடிகன் பதிப்பகம்,
நெ. 17, நல்லான் தெரு,
வன்னியதேனாம்பேட்டை,
சென்னை-18.

சரத் சந்திர சட்டர்ஜி

தமிழாக்கியவர்
ஆர். ஷண்முகசுந்தரம்




மயிலாப்பூர் :: சென்னை-4.

# பதிப்புரை

நாவல் எழுதுவதில் தனித் திறமை பெற்ற இந்திய எழுத்தாளர் சிலரில் சரத் சந்திர சட்டர்ஜி சிறந்தவர். அவரது எழுத்தும் கருத்தும் நம் மக்களால் பெரிதும் வரவேற்கப்படுகின்றன. அவரது நூல்களில் சில ஏற்கெனவே தமிழில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளன.

திரு. ஆர். ஷண்முகசுந்தரம் அவர்கள் சொந்தமாகவே சிந்தித்துப் பல நாவல்களும், கதை, கட்டுரைகளும் எழுதியுள்ளார்கள். அவற்றுடன் சரத் சந்திரர் எழுதிய பல நூல்களையும் மொழி பெயர்த்துள்ளார்கள். அதன் உரிமை பலவற்றை எங்களுக்கே அளித்துள்ளார்கள். அவைகளெல்லாம் தொடர்ந்து விரைவில் புத்தகமாக வெளிவர விருக்கிறது. பதிப்புரிமை அளித்த திரு. ஆர். ஷண்முகசுந்தரம் அவர்களுக்கு எங்கள் நன்றி.

**சோம. சுவாமிநாதன்**
நிர்வாகி, இன்ப நிலையம்.

**5–12–50**

# ஜமீந்தாரிணி

காசிநாதன் அதிகாலை நான்கு மணிக்கே எழுந்து விடுவான். உடனே குளித்துப் பூஜை செய்வான். பிறகு பண்டித தனஞ்சய பட்டாச்சார்யாவின் பள்ளிக் கூடத்துத் திண்ணையில் போய் உட்கார்ந்து கொள்வான். அப்படி உட்கார்ந்து, தர்சன சாஸ்திரத்தின் சூத்திரங்களை உருப்போட ஆரம்பித்து விட்டானானால், அப்புறம் அவனுக்கு வெளி உலகத்துச் சிந்தனையே யிருக்காது. அழகிய நெற்றியும் திடகாத்திரமான சரீரமும் படைத்த காசிநாதன், தர்சன சாஸ்திரத்தின் அடர்ந்த கானகத்தில் புகுந்த பிறகு, அதிலேயே வளைந்து வளைந்து சுற்றிக் கொண்டிருப்பான். அவனை இந்நிலையில் காணும் ஜனங்கள் விதம்விதமாகப் பேசிக்கொள்வார்கள். "தனது தந்தையைப் போலவே இவனும் ஒரு வித்வான் ஆவான்" என்று ஒருவர் சொல்லுவார். "படித்துப் படித்துத் தகப்பன் மாதிரி தானும் ஒரு பைத்தியமாகாதிருக்கட்டும்" என்பார் இன்னொருவர். 'அவன் பைத்தியம் ஆடுவிடுவான்' என்று சந்தேகப்பட்டவர்களில், அவனுடைய மாமாவும் ஒருவர். அவர் அடிக்கடி, "அப்பா! நீயோ ஏழைப் பையன்; இவ்வளவு படித்து என்ன செய்யப்போகிறாய்? இதுவரையிலும் நீ படித்திருக்கும் படிப்புக்கே எப்படியும் உனக்கு ஒரு பிடி அரிசியும் ஒரு முழத் துண்டும், சுலபமாகக் கிடைத்து

விடும். இத்தனை படித்து விட்டுக் கடைசியில் நீயும் காலஞ் சென்ற வங்கியாபாத்யாயாவைப் போல, வீட்டின் ஒரு மூலையிலே உட்கார்ந்து, தலையாட்டிக் கொண் டிருக்கப் போகிறாயா? இப்போது இருக்கிற கொஞ்சம் சொத்தும் அப்போது போய்விடும்" என்று சொல்லுவது வழக்கம்.

மாமாவின் இந்த உபதேசத்தைக் காசிநாதன் ஒரு காதில் வாங்கி, மறு காதால் விட்டுவிடுவான்.

பைத்தியமாகிவிடுவானோ என்ற பயத்தினால், மாமா அவனை மிரட்டுவார். வீட்டு வேலைகள் ஒன்றும் செய்யாததால், மாமி அவனைக் கோபிப்பாள். வியா கரணத்திலே அவன் விற்பன்னனாயிருப்பதால், அவனை விட வயதில் மூத்தவர்களான மாமாவின் புதல்வர்கள் அவனைக் கேலி செய்வார்கள்.

ஆனால், காசிநாதன் இவற்றையெல்லாம் பொறுத் துக்கொண்டு, ஒன்றையும் காதில் போட்டுக் கொள்ளாம லிருந்தான்.

என்ன நடந்தாலும், தான் இதுவரையில் தினசரி என்ன செய்து வந்தானோ அதையேதான் இன்னும் அவன் செய்து வந்தான். சாயங்காலம் வெளியிலே உல்லாசமாக உலாவுவான். சில சமயம் ஆற்றங்கரையின் அரச மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு அஸ்தமன சூரியனின் ரத்தச் சிவப்பு எப்படி ஆகாயத்திலிருந்து மறைகிறதென்று பார்த்துக் கொண்டிருப்பான். சில சமயம் கிராமத்து ஜமீன்தார் வீட்டுச் சிவன் கோவி லுக்குச் சென்று, அங்கே செய்துள்ள தீபாலங்காரத்தைப் பாதி மூடிய கண்களுடன் பார்த்துக் களிப்பான். எங்குமே போகாமல், மாமாவின் வீட்டுக் கூடத்தில் ஒரு இருண்ட மூலையில் ஆசனம் விரித்து மௌனமாக உட்கார்ந்து விடுவதும் உண்டு.

உலகத்திலே அவனுக்கு ஒரு வேலையோ, உத்யோகமோ, இச்சையோ எதுவுமே இல்லாததுபோல்தான் இருக்கும் அவனது நடத்தைகள். பன்னிரண்டாவது வயதிலேயே அவனது தந்தை இறந்து விட்டார். இந்த ஆறு வருஷங்களும் தன் மாமாவின் வீட்டிலே இவ்விதம் அவன் வளர்ந்து வருகிறான். இதுவரை என்ன செய்தோம், இப்போது என்ன செய்கிறோம், இனி என்ன செய்யப்போகிறோம் என்பதை எல்லாம் அவன் சிந்திப்பதே யில்லை. அவனுக்கு இவ்விதமேதான் நாள் கழிந்தது. "எப்பொழுதும் வீட்டிலே இரண்டு வேளையும் அதட்டலும் மிரட்டலுமாய்ச் சாப்பிட்டுக்கொண்டேயிருக்கலாம்; எங்கும் போக வேண்டியதில்லை, ஒன்றும் செய்ய வேண்டியதில்லை" என்றே அவன் நினைத்துக் கொண்டிருந்தான். அவனுடைய அந்த அமைதியான இருளடைந்த மூலை அவன் ஆளுகையில்தான் சதா இருந்தது. யாரும் அதைப் பிடித்துக் கொள்ள வருவதில்லை; 'தள்ளி வேறொரு இடத்தில் உட்கார்' என்று அவனை எவரும் சொன்னதும் இல்லை. தெருவிலுள்ள சில மனிதர்கள் இரக்கமுற்று அவனைக் கூப்பிட்டு, "காசிநாதா! இப்படியே எப்போதும் ஒருவர் வாழ முடியாது; நீயும்கூட அப்படித்தான். ஏதாவது காரியம் செய்" என்று சொல்வது வழக்கம். காசிநாதன் ஒன்றும் பதில் அளிப்பதில்லை. "என்ன செய்வது?" என்று மனதுக்குள் தானே கேட்டுக் கொள்வான். இவ்விதம் காசிநாதனின் நாட்கள் கழிந்து கொண்டிருந்தன.

# அத்தியாயம் 2

அந்தக் கிராமத்து ஜமீந்தாரின் பெயர் பிரியநாத முகோபாத்யாயா. பிரியநாத பாபு மிக உயர்ந்த குலத்தில் பிறந்தவர்; பெரும் பணக்காரர். தாம் இவ்வளவு பெரிய மனிதராயிருந்தும் கூட, குல மரியாதையைக் காப்பாற்றக்கூடிய சர்வகுண சம்பன்னனான ஒரு வரன் தனது மகளுக்குக் கிடைக்காமல் போகவே, அவருக்குத் தமது உயர்குலத்தின் மேலேயே எரிச்சல் உண்டாயிற்று! மனைவியிடம் இதைச் சொல்லும் போதெல்லாம், அவள், "எனக்கு ஒரே ஒரு பெண் தான் இருக்கிறாள். நாம் உயர் குலத்தில் பிறந்து என்ன பிரயோஜனம்?" என்பாள். அவருடைய குரு தேவரும் அதே கிராமத்தில்தான் வசித்து வந்தார். அவரிடம் கேட்கவே, அவர், "ஹரி, ஹரி! நல்லகூத்து! உனக்குப் பணத்துக்கொன்றும் குறைவில்லை. உயர்ந்த வம்சத்தில் உதித்த யாராவது ஒரு ஏழைக்கு அவளைக் கன்னிகாதானம் செய்து கொடுத்து, மாப்பிள்ளையையும் பெண்ணையும் வீட்டிலேயே வைத்துக்கொள். அதுதான் பார்ப்பதற்கு நன்றாயிருக்கும். எவ்வளவு பெரிய வம்சம் எவ்வளவு உயர்ந்த குலம்! என்னவானாலும் இதன் பெருமை குறையலாமா?" என்றார்.

பிரியநாத பாபு வீட்டுக்கு வந்து இதைத் தமது மனைவியிடம் சொன்னார். அவள் மிகுந்த சந்தோஷத்துடன், "ஆமாம், அப்படியே செய்யுங்கள்; நான் உயிரோடிருக்கிற வரையிலும், கமலா என்னருகிலேயே இருக்கட்டும்" என்று தன் சம்மதத்தைத் தெரிவித்தாள். இவ்விதம் உயர்குல ஏழைப் பையனுக்கு விவாகம் செய்து மகளையும் மருமகனையும் வீட்டிலேயே வைத்துக் கொள்வது என்ற எண்ணத்தை உறுதிப் படுத்திக்

கொண்ட பிரியநாத பாபு, ஒரு நாள் பண்டித மதுசூதன முகோபாத்தியாயாவின் வீட்டை அடைந்தார். பண்டிதர் அப்பொழுது தமது எஜமானர் வீட்டுக்கு நித்திய பூஜை செய்வதற்காகச் சென்று கொண்டிருந்தார். திடீரென இவ்வளவு பெரிய ஜமீன்தார் வந்ததால், பண்டிதர் பெரிய சங்கடத்தில் ஆழ்ந்தார். ஜமீன்தாரை எங்கே உட்கார வைப்பது, எப்படி உபசரிப்பது என்று அந்த 'அப்பாவி'க்கு ஒன்றுமே தோன்றவில்லை.

மதுசூதனர் சங்கடப்படுகிறார் என்பதைப் பிரியநாத பாபு அறிந்து கொண்டார். அவர் சிரித்துக் கொண்டு, "உங்களிடத்தில் கொஞ்சம் ஜோலி யிருக்கிறது, வாருங்கள் கொஞ்சம் உள்ளேபோய் உட்காருவோம்" என்றார்.

"ஆஹா! வாருங்கள். ஆனால்—"

"ஆனால் கீனால் ஒன்று மில்லை—வாருங்கள், உட்கார்ந்து எல்லா விஷயமும் சொல்கிறேன்."

இரண்டு பேரும் வீட்டுக் கூடத்திற்குச் சென்று உட்கார்ந்தார்கள். பிரியநாத பாபு, "உங்கள் மருமகன் எங்கே?" என்று கேட்டார்.

"எங்கேயாவது இருப்பான். பட்டாசார்யாவின் கலாசாலையில் படிக்கிறான்."

"கொஞ்சம் அவனைக் கூப்பிடுங்கள்."

"கூப்பிடுகிறேன். ஏதாவது முக்கியமான விஷயமோ?"

"ஆம், முக்கியமான விஷயந்தான்."

ஒரு விஷயமும் தெரியாத வெகுளியான அந்தப் பையனுடன் இவ்வளவு பெரிய ஜமீன்தாருக்கு என்ன காரியம் இருக்க முடியும் என்பதை மதுசூதனர் என்ன தான் யோசித்தும் ஊகிக்க முடியவில்லை! அதனால் அவர் சிறிது பயந்துகொண்டு, "ஏதாவது குற்றம் குறை செய்து விட்டானோ?" என்று கேட்டார்.

" குற்றம் குறைக்கு என்ன வந்தது ?"

" பின்னே ?,'

பிரியநாத பாபு சிரித்துவிட்டார். " நான் அவனை எனது மாப்பிள்ளை யாக்கிக் கொள்ளத் தீர்மானித்திருக்கிறேன். அந்த உறவிலே நீங்களும் எனக்குச் சொந்தம் ஆகிவிட்டீர்கள் " என்று சொல்லி, கடகட வென்று நகைத்தார். அவர் எதை நினைத்து இப்படிச் சிரித்தார் என்பதைத் தாம் அறிந்திருந்தால், மதுசூதனர் மறுபடி ஒன்றும் சொல்லியிருக்க மாட்டார். பண்டிதர் ஆச்சரியத்தால் பிதுபிது வென்று விழித்துக் கொண்டு பாபுவை வெறித்துப் பார்க்கத் தொடங்கினார். சிறிது நேரத்துக்கப்புறம், " யாரை ? காசிநாதனையா ?" என்று கேட்டார்.

" ஆம "

" எதற்காக ?"

" இவ்வளவு நல்ல குலத்துப் பையன் எங்கே தேடியும் எனக்குக் கிடைக்கவில்லை, உங்களுக்கு இதில் ஏதாவது தடை உண்டா ?"

" தடையா ! இது என் பாக்கியம் அல்லவா ? ஆனால், அவன் பைத்தியமாயிற்றே !"

" பைத்தியமா ? என்ன, நான் ஒரு நாளும் அப்படிக் கேள்விப் பட்டதில்லையே ?"

" அவனுடைய தகப்பனார் பைத்தியமாயிருந்தார்."

காசிநாதன் தந்தையைப் பிரிய பாபுவுக்கு நன்றாய்த் தெரியும். அவரை அநேகர் பைத்தியமென்று சொன்னதும் அவருக்குத் தெரியும். பிரிய பாபு சிறிது நேரம் யோசித்துவிட்டு, பையனின் பெயர் என்ன ?" என்று விசாரித்தார்.

" காசிநாத வந்யோபாத்யாயா."

" அவனைக் கூப்பிடுங்கள் — நான் பார்க்கிறேன் "

உடனே அவனை அழைத்துவர, மதுசூதனர் தமது சின்ன மகனை அனுப்பினர். அவன் போய், " காசிநாத அண்ணு !" என்று கூப்பிட்டான்.

காசிநாதன் " என்ன ?" என்ருன்.

" அப்பா கூப்பிடுகிருர்."

" ஏன் ?"

" அது எனக்குத் தெரியாது. ஜமீந்தார் பாபு வந்திருக்கிருர். அவர் உன்னைக் கூட்டிவரச் சொன்னர்."

காசிநாதன் மெதுவாகப் புஸ்தகத்தை மூடிவைத்து விட்டு, எழுந்து நடந்தான். அவன் வந்து இவர் களுக்கு எதிரில் உட்கார்ந்ததும், பிரிய பாபு அவனை மேலும் கீழும் உற்றுப் பார்த்து விட்டு, " காசிநாதா ! இந்நேரம் எங்கிருந்தாய் நீ ?" என்று கேட்டார்.

" பட்டாசார்யாவின் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தேன்."

" நீ வியாகரணம் படித்திருக்கிருயா ?"

காசிநாதன் தலையை அசைத்து, " ஆம், படித் திருக்கிறேன் " என்று பதில் அளித்தான்.

" இலக்கியம் படித்திருக்கிருயா ?"

" ஏதோ கொஞ்சம் படித்திருக்கிறேன்."

" இப்பொழுது என்ன படிக்கிருய் ?

" காவ்யதர்சனம் "

" சரி, போய்ப்படி " என்று பிரிய பாபு சொன்னர்

காசிநாதன் போய்விட்டான். தன்னை ஏன் அழைத் தார்கள், ஏன் போகச் சொல்லிவிட்டார்கள் என்பது ஒன்றும் அவனுக்குத் தெரியாது ; அதைப்பற்றி அவன் கவலைப்படவுமில்லை. பள்ளிக்கூடத்துக்குச் சென்று மறுபடியும் புஸ்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு நிம்மதியாய் முன்போலவே உட்கார்ந்துவிட்டான்.

அவன் சென்ற பிறகு, பிரியபாபு, "உம், அவன் பைத்திய மென்றல்லவா நீங்கள் சொன்னீர்கள் ?" என்றார்.

மதுசூதனர், "இல்லை, அவன் பூராப் பைத்திய மல்ல. ஆனால், கொஞ்சம் விசித்திரமாயிருக்கிறான் ; அதனால் ஊராரெல்லாம் அவனைப் பைத்திய மென்று சொல்லுகிறார்கள் " என்றார்.

"அதெப்படி ?"

"அவன் எப்பொழுதும் புஸ்தகமும் கையுமாகவே உட்கார்ந்து கொள்கிறான் ; அல்லது தன் மனம் போன படி அங்குமிங்கும் திரிகிறான். ஒரு விஷயத்திலும் ஒரு வேலையிலும் மனம் நிலைத்திருப்பதில்லை—இதெல்லாம் கொஞ்சம் விநோதமா யில்லையா ?"

"இவ்வளவு தானா ? இன்னும் ஏதாவது செய்கிறானா ?"

"ஆஹா ! இன்னும் ஒன்றுண்டு. எப்பொழுதாவது வீட்டின் ஒரு இருண்ட மூலையில் மணிக் கணக்காகத் தனியே உட்கார்ந்து கொள்கிறான்."

பிரிய பாபு சிரித்துக் கொண்டு, "இன்னும் ஏதாவ துண்டோ ?" என்றார்.

இந்தச் சிரிப்பின் அர்த்தத்தை மதுசூதனர் கொஞ்சம் கொஞ்சம் அறிந்துகொண்டார். சிறிது மென்று விழுங்கிக்கொண்டே, "இல்லை, வேறு ஒன்று மில்லை " என்றார்.

"ஆனால், வீட்டிலே கொஞ்சம் கேட்டுப் பாருங்கள். அவர்களுக்கும் சம்மதமானால், இந்த மாதத்திலேயே விவாகத்தை நடத்தி விடலாம்."

பண்டிதர் உள்ளே சென்று இங்கே நடந்ததை யெல்லாம் தமது மனைவியிடம் சொன்னார். அதைக்

கேட்ட அவள், ஆகாசத்திலிருந்து விழுந்தவள் போலத் திகைத்து விட்டாள். ஆச்சரியம் சிறிது குறைந்ததும், "நம்ம காசி, பிரிய பாபுவின் மாப்பிள்ளையா! உங்களுக் கொன்றும் பைத்தியமில்லையே?" என்று கேட்டாள்.

"இதில் பைத்தியம் என்ன வந்தது?"

"பைத்தியமில்லாமல் என்ன?"

"காசிநாதன் எவ்வளவு உயர்ந்த வம்சத்துப் பையன்? அதைக் கொஞ்சம் நினைத்துப் பார்."

பண்டிதரின் மனைவி பெருமூச்சு விட்டுக்கொண்டு, "இந்தச் சம்பந்தம் நம்ம ஹரிக்குக் கிடைக்கலாகாதா!" என்றாள். அது முடியாத காரியம் என்பதை இருவரும் அறிந்தேயிருந்தார்கள்.

பண்டிதரும் பெருமூச்சுடன், "உன் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டார்.

பண்டிதரின் மனைவி துக்கத்தோடு, "என் அபிப் பிராயம் என்னவானாலென்ன?—கலியாணமாகட்டும்" என்றாள்.

பண்டிதர் வெளியில் வந்து, ஒரு வறட்டுச் சிரிப் புடன், "அவள் என்ன ஆனந்தப்படுகிறாள், தெரியுமோ! அடங்கா ஆனந்தம்! அவள் தான் இப்போது காசியின் தாய். எனது தங்கை இறந்தபோது, அவனுக்கு இரண்டு வயசு கூடப் பூர்த்தியாக வில்லை. அப்போ திருந்து இவள்தான் அவனைக் காப்பாற்றி வந்து ஆளாக் கினாள். அதற்கப்புறம் மைத்துனரும் இறந்து விட்டார். அது முதல் காசி இங்கேயே இருந்து வருகிறான்" என்றார்.

"எனக்கு அதெல்லாம் தெரியும். இன்றைக்கே எல்லா விஷயத்தையும் தீர்மானம் செய்து விடுங்கள்" என்றார் பிரிய பாபு.

" தீர்மானம் என்ன செய்யவேண்டும்? தங்களுக்கு எப்பொழுது சௌகர்யமோ அப்பொழுது அழைத்தால் ஓடிவந்து ஆசீர்வாதம் செய்கிறேன்."

" அதல்ல நான் சொல்வது ; குல வழக்கத்தைப் பற்றியே கேட்கிறேன்."

" அது விஷயமாக நான் என்ன தீர்மானம் செய்வது? தாங்கள் என்ன உத்திரவு இடுகிறீர்களோ, அப்படியே நடக்கிறேன். ஆனாலும், தங்களுடைய மாப்பிள்ளையின் மாமியிடம்—ஒரு விதத்தில் அவன் தாயும் அவள் தானே—கொஞ்சம் கலந்து கொள்வது நல்லது."

" ஆமாம், அவசியம் கலக்க வேண்டும். அதைத் தான் நானும் சொன்னேன்."

இதன்பிறகு, பையனுடைய மாமியின் அபிப்பிராயம் விசாரிக்கப்பட்டது. அவனது தாய்க்குச் சமதையான மாமி, ஓர் ஆயிரம் ரூபாய் ரொக்கம் வாங்காமல், காசிக்கு எவ்விதத்தும் விவாகம் செய்ய முடியாது என்று கண்டிப்பாய்க் கூறிவிட்டாள். கடைசியில் அப்படியேதான் நடந்தது. பெரிய பாபு அதற்கொன்றும் தடை சொல்ல வில்லை.

# அத்தியாயம் 3

முதலில் எப்படி யிருந்தாலும், கொஞ்ச நாளில் காசிநாதன் ஜமீன்தார் வீட்டைவிட்டு அப்பால் இப்பால் போகமுடியாத மாப்பிள்ளை ஆகிவிட்டான். தனது இந்த நிலையைக் கண்டதும், அவன் மனம் சந்தோஷத்தை இழந்தது. தான் இஷ்டப்பட்ட இடத்துக்கு இப்போது அவன் போக முடியாது; இஷ்டப்பட்ட இடத்தில் தங்கவும் முடியாது. சகல பொருள்களி லிருந்தும், அவன் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தான். அவன் போக விரும்பும் இடத்துக்குப் போக, மாமனாரின் அனுமதி கிடைப்பதில்லை; அப்படிக் கிடைத்தாலும், "எனது மருமகன் என்ன—பலானவர்கள் வீட்டுக் கெல்லாம் போவதா?" என்று சலித்துக்கொண்டே தான் அவர் அனுமதி தருகிறார். பாவம்! மருமகன் மனமிடிந்து உட்கார்ந்து விடுவானே தவிர, எப்படிப் போவான்? இம்மாதிரி நிலைமை ஏன் உண்டாயிற்று? அவன் ஏன் இவ்விதம் வைக்கப்பட்டிருக்கிறான்?— இப்படிச் செய்வதால், யாருக்கு என்ன திருப்தி? அவனுக்கு இது ஒன்றுமே புரியவில்லை. "நான் என்ன சாதாரண மனிதனா, அங்குமிங்கும் சுற்றுவதற்கு?" என்று சில சமயங்களில் தனக்குத்தானே சமாதானப் படுத்திக்கொள்வான். ஆனால் உள்ளுக்குள்ளே அவனுடைய இதயம், 'உனக்குக்குச் சந்தோஷமில்லை; சாந்தியில்லை" என்று புலம்பும். முன்னே அவன் ஒரு முள் காட்டிலே தன் இஷ்டம்போல் சுற்றியலைந்து கொண்டிருந்தான்; இப்பொழுதோ ஒரு தங்கக் கூண்டிலே அடைபட்டிருக்கிறான். இதைக் காசிநாதன் உணரத் தலைப்பட்டான். முந்தி அவன் எல்லையற்ற பெருங்கடலிலே நீந்திக் கொண்டிருந்தான்; இப் பொழுதோ நாற்புறத்திலும் அரண் சூழ்ந்ததொரு

புஷ்கரணியிலே அவனை விட்டிருக்கிறார்கள். அப்போது அவன் சமுத்திரத்திலே சுகமாக நீந்திக்கொண்டிருந்தான் என்பதில்லை; அங்கே அவனைப் புயலும் அலைகளும் வாட்டிக்கொண்டுதான் இருந்தன; ஆனாலும், இந்த நிர்மலமான புஷ்கரணி அதைவிடக் கஷ்டமாக இருக்கிறது. கொதிக்கும் வெந்நீர் அண்டா ஒன்றுக்குள்ளே தன்னை யாரோ தள்ளிவிட்டார்கள் என்று அவன் அடிக்கடி எண்ணுவான். எல்லோரும் சேர்ந்து தன்னுடைய தேகத்தை விலைக்கு வாங்கிவிட்டது போலவும், இப்பொழுது அது தனக்குச் சொந்தமில்லை போலவும் அவனுக்குத் தோன்றியது. அவன் தலையிலே பழைய உச்சிக் குடுமியில்லை; கழுத்திலே அந்தத் துளசி மாலையுமில்லை. வெறும் கால் இல்லை; வெறும் மேல் இல்லை. தனஞ்சய பட்டாச்சார்யாவின பள்ளிக்கூட மில்லை. ஆற்றங்கரை அரசமர மில்லை. குடிசை வீட்டுக் கூடத்தின் அந்த மூலைகூட இல்லை! பழையது ஒன்றுமே இல்லை!!

அவன் புனர்ஜன்ம மெடுத்து, போன ஜன்மத்தின் சகல தொடர்புகளையும் உதறி எறிந்து விட்டதைப் போலிருந்தது. அவனுடைய தேகம், மனம் இரண்டும் தங்களுக்குள்ளே சச்சரவிட்டுக் கொண்டு, தனித்தனியா யிருந்தன. சாயங்காலமானதும், அவன் மனம் ஆற்றங் கரையின் அரச மரத்தடியிலோ அல்லது அக்கம்பக்க வயல்களில் உள்ள குடியானவர்களையோ சுற்றிக் கொண்டிருக்கும்; தேகமோ அப்பொழுது விலையுயர்ந்த ஆபரணங்களை அணிந்து, வண்டியிலே உல்லாச சவாரி செய்துகொண்டு காற்று வாங்கும். மனம் கோவணத்தைக் கட்டிக்கொண்டு நதியில் குதித்து நீந்தும்போது, தேகம் அழகியதோர் ஆசனத்தில் அமர்ந்து, வேலைக் காரர்கள் சோப்பும் எண்ணெயும் தேய்த்துவிடக் குளித்துக்கொண்டிருக்கும். இவ்விதம் ஒரே காசிநாதன் எப்பொழுதும் இரண்டிடங்களில் இருவித வேலைகள்

செய்துவந்தான். ஆனால், ஒரு வேலையும், அவனது உள்ளமும் உடலும் சேர்ந்த முழு ஜீவனுக்கு அழகா யிருப்பதில்லை ; பூர்த்தி யடைவதுமில்லை.

அநேக நாட்கள் இவ்விதமே சென்றன. ஒவ்வொன் ருகப் பன்னிரண்டு மாதங்கள் கழிந்தன. முதலில் சில மாதங்கள் கஷ்டமாயில்லை. புதிய ஆனந்தத்தில், புது மோகத்தில், அவன் தனது நிலையைச் சரி, தப்புப் பார்ப் பதற்கு அவகாசம் கிடைக்கவில்லை. ஆனால், அது கிடைத்தவுடன், நாளுக்கு நாள் வற்றத் தொடங்கினான். இந்த விஷயம் யாருக்கும் தெரியாது ; ஆனால் கமலா அறிந்துகொண்டாள்.

அவளுடைய கண்கள் கணவனின் நிலையைக் கண்டுகொண்டன. ஒரு நாள் அவள், "நீங்கள் நாளுக்கு நாள் ஏன் இப்படி இளைத்துப் போகிறீர்கள் ?" என்று கேட்டாள்.

"யார் சொன்னது ?"

"என் கண்களே சொல்லுகின்றன."

"உன் கண் பொய் சொல்லுகிறது."

அப்புறமும் அவள் விடவில்லை : "விஷயம் என்னவென்று என்னிடம் சொல்லமாட்டீர்களா ?" என்றாள்.

"ஒன்றுமில்லையே, என்ன சொல்லுவேன் ?"

"ஒன்றுமில்லையா ? ஏதோ நடந்திருக்கிறது ; மறைக்கிறீர்கள்."

"இல்லையே !"

"நிச்சயம் என்னவோ நடந்திருக்கிறது ? என் மன துக்கு எல்லாம் தெரியும்."

காசிநாதன் முகத்தைத் திருப்பிக்கொண்டு, "நீ ரொம்பத் தொந்தரவு செய்கிறாய். நான் போகிறேன்" என்றான்.

அவன் போகத் தொடங்கவும், கமலா அவனுடைய கைகளைப் பிடித்துக்கொண்டாள். வியாகூலத்துடன், "போகக்கூடாது. நான் இனி ஒன்றும் கேட்கவில்லை" என்றாள்.

காசிநாதன் உட்கார்ந்தான். ஆனால், அடுத்த கணமே மௌனமாய் எழுந்து போய்விட்டான். கமலாவும் அவனை மீண்டும் உட்காரச் சொல்லவில்லை. கணவன் சென்ற பிறகு, அவள் ஒரு கட்டிலில் சாய்ந்து, தலையணையில் முகத்தைப் புதைத்துக்கொண்டு, தன்னந் தனியே அழ ஆரம்பித்தாள்.

வெளியில் சென்ற காசிநாதன் தன்னை எவரும் கவனிக்கவில்லை என்பதை நிச்சயப் படுத்திக்கொண்டு, மெள்ள மெள்ள வெளிக்கதவைத் தாண்டி வீதியில் இறங்கி நடந்தான். வெகுதூரம் சென்ற பிறகு, தனக்குப் பின்னால் ஒரு தர்வான் வந்துகொண்டிருப் பதைக் கண்டான். காசிநாதன் மிகுந்த எரிச்சலுடன் "நீ எங்கே வருகிறாய்?" என்று தர்வானைக் கேட்டான். அவன் சலாம் செய்து, "எஜமானோடு" என்றான்.

"என்னோடு நீ வரவேண்டியதில்லை—திரும்பிப் போ."

"மாலை நேரத்தில் துணை எவருமின்றி எஜமான் தனியாகவா உலாத்துவீர்கள்?"

ஒரு பதிலும் அளிக்காமல் காசிநாதன் மேலே நடந்தான். பாவம்! தர்வான் என்ன செய்வான்? அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. கடைசியாக கொஞ்சநேரம் நின்று தானாக யோசித்துப் பார்த்தான். "எஜமானோடுகூடப் போகத்தான் வேண்டும்" என்று தீர்மானித்துக்கொண்டு, தொடர்ந்து செல்லலானான். காசிநாதன் இதைக் கொஞ்சமும் கவனிக்கவில்லை. தன் இஷ்டப்படி நடந்து, தனது மாமாவின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான். உள்ளே சென்று, துக்கத்தோடு

தாழ்வாரத்தில் உட்கார்ந்தான். வெகுநேரம் வரையிலும் அப்படியே உட்கார்ந்து கொண்டிருந்தான். வெளியே உலாவக் கிளம்பிய ஹரிபாபு இவனைக் கண்டார். ஆனால் கொஞ்சம் இருட்டாயிருந்ததால் அவரால் இவனை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. கிட்டவந்து, " யார் ?" என்று கேட்டார்.

" நான்தான் " என்றான் காசிநாதன்.

ஹரிபாபுவுக்கு ரொம்ப ஆச்சரியமா யிருந்தது. " ஹா ! சின்ன எஜமானர் ! இங்கே எப்படி வந்தீர்கள் ?" என்றார்.

காசிநாதன் மௌனம் சாதித்தான். ஹரிபாபு உரத்த குரலில், "அம்மா, பார் ! இங்கே பார் ! ஜமீன் தார் வீட்டுச் சின்ன எஜமானர் வந்திருக்கிறார்—அவர் உட்காருவதற்கு யாரும் ஆசனம்கூடப் போடவில்லையே!" என்றார்.

ஹரியின் தாயார் ஓடி வந்தாள். " மகராஜனாயிரு அப்பா ! ஏழை மாமியின் நினைவு வந்ததா ?" என்றாள்.

காசிநாதன் அப்பொழுதும் பேசாமலிருந்தான். பிறகு, மாமி தனது மகள் விந்துவாசினியைக் கூப்பிட்டு " விந்து ! ஜல்தியாக வா ; பார், உன் காசி அண்ணா வந்திருக்கிறான். உட்காருவதற்கு ஏதாவதுகொண்டுவா— அதற்குள் நான் சாயங்கால ஜபம் செய்துவிட்டு வரு கிறேன் " என்றாள்.

விந்துவாசினி, மதுசூதன பட்டாசார்யாவின் கடைசிப்பெண். கட்டிக் கொடுத்ததற்கப்புறம் தாயார் வீட்டுக்கு அதிகமாக வருவதில்லை. இப்பொழுது அவள் வந்து ஒருமாதம்தான் ஆகிறது. ஆனால் இதுவரையிலும் காசி அண்ணாவை அவள் பார்க்கவில்லை. காசி அண்ணா விடம் அவள் அதிக அன்பு கொண்டிருந்தாள். ஆகை யால், அண்ணாவின் பெயரைக் கேட்டதும், ஓட்டமாய் ஓடிவந்தாள். வந்து பார்க்கவே, காசி அண்ணாவைக்

காணோம்—யாரோ ஒரு பாபு இருட்டிலே தாழ்வாரத்தில் உட்கார்ந்துகொண்டிருந்தார்! காசி அண்ணாவை இந்தக் கோலத்திலே அவள் ஒருபோதும் கண்டதில்லை! காசி அண்ணா. இப்போது பெரிய மனிதர் வீட்டு மாப்பிள்ளையாகி யிருக்கிறார் ; 'பாபு' ஆகியிருக்கிறார். இதைக் கண்டு அவளுக்குச் சிரிப்பு வந்தது. ஆனால் இருட்டில் உட்கார்ந்திருக்கும் அண்ணாவின் அருகில் சென்று அவரது ஏங்கிய முகத்தைக் கண்டதும் அவளுடைய சிரிப்புப் பறந்து விட்டது.

காசிநாதனின் முகம் கறுத்திருப்பதை, விந்துவைத் தவிர வேறு யாரும் பார்க்கவில்லை. வீட்டிலேயே அவள் ஒருத்திதான் காசியின் மனதைக் கொஞ்சம் அறிந்திருந்தவள். காசியின் அருகில் வந்து, அவனது முதுகை நீவிக்கொண்டு மிகுந்த அன்புடன் "காசி அண்ணா! இங்கே ஏன் தனியாக உட்கார்ந்திருக்கிறாய்? வா, உள்ளே வந்து உட்கார், எழுந்திரு" என்றாள் விந்து. காசிநாதன் பேசாமல் எழுந்து வீட்டுக்குள் சென்று, கட்டிலின் மேல் உட்கார்ந்தான்.

"அண்ணா, நான் இங்கே வந்து எத்தனை நாளாகிறது! நீ ஒருநாள்கூட என்னைப் பார்க்க வரவில்லை, பார்த்தாயா?" என்றாள் விந்து.

"வர முடியவில்லை"

"ஏன், வரமுடியவில்லை?"

காசிநாதன் கொஞ்சம் அக்கம் பக்கம் பார்த்துவிட்டு, "என்னை அவர்கள் வர விடுவதில்லை" என்றான்.

"வர விடுவதில்லையா! ஏன்?"

காசிநாதன் எங்கேயோ ஞாபகமாக, "அப்படித்தான்" என்றான்.

விந்து துக்கமடைந்து, "நீ போக விரும்பும் இடத்துக்கு உன்னை அவர்கள் போக விடுவதில்லையா?" என்று கேட்டாள்.

" இல்லை, போக விடுவதில்லை. நான் எங்கேயாவது போனால் மாமனாருக்கு அவமானமாக இருக்கிறதாம்"

அண்ணா சங்கடப்படுகிறான் என்று அறிந்து கொண்ட விந்து, பேச்சை மாற்றி, " அண்ணா நீ நாட்டுப் பெண்ணைக் காட்டவில்லையே ?" என்றாள்.

காசிநாதன் மௌனமாக இருந்தான்.

" நாட்டுப் பெண் எப்படி இருக்கிறாள் ?" என்று விந்து மீண்டும் கேட்டாள்.

" நன்றாயிருக்கிறாள்."

" ஆனால் நான் ஒரு நாளைக்கு வந்து அவளைப் பார்த்து விட்டு வரலாமா ?"

காசிநாதன் தலையை உயர்த்தி விந்துவின் முகத்தைப் பார்த்தான். பிறகு கொஞ்சம் சிரித்து, " பார்த்து வரலாம் " என்றான்.

இதற்குள் வெளியில் வண்டி வரும் சத்தம் கேட்டது.

விந்து " உனது வண்டி வந்துவிட்டது போலிருக்கிறது " என்றாள்.

" ஆம். அப்படித்தான் தோன்றுகிறது."

கொஞ்சநேரம் கழித்து, காசி, தான் திரும்பிப் போகிற சமயத்தில். விந்துவை நோக்கி, " எப்போது வருகிறாய் ?" என்று கேட்டான்

" எங்கே ?"

" நாட்டுப் பெண்ணைப் பார்க்க."

விந்து புன்சிரிப்புடன், " எப்போது உனக்குச் சமயம் கிடைக்கிறதோ அப்போது வந்து கூட்டிப்போ " என்றாள்.

" நாளைக்கு வரட்டுமா ?"

"நிச்சயமாக வரவேண்டும்."

தான் சொன்னபடியே காசிநாதன் அடுத்த நாள் வண்டி கொண்டு வந்தான். விந்து நல்ல சேலையுடுத்தி, அலங்காரம் செய்துகொண்டு புறப்படுகிற சமயத்தில், எங்கிருந்தோ ஹரிபாபு வந்து சேர்ந்தார். அவர் வரும் போதே, வாசலில் வண்டி நிற்பதைப் பார்த்தார். அதிலிருந்து காசிநாதன் வந்திருப்பான் என்று அனுமானித்துக் கொண்டார். உள்ளே வந்ததும், தமது மனைவியிடம் சென்று "விந்து எங்கே போகப் போகிறாள்?" என்று கேட்டார்.

"நாட்டுப் பெண்ணைப் பார்க்கப் போகிறாள்" என்று அவள் சொன்னாள்.

"எந்த நாட்டுப் பெண்ணை? ஜமீன்தாரின் மகளையா?"

மனைவி ஒன்றும் பதில் அளிக்கவில்லை.

ஹரிபாபு உக்கிரமாக, "விந்து அங்கே போவாளானால், நான் உயிருள்ள வரையிலும் அவள் முகத்தில் விழிக்க மாட்டேன்" என்றார்.

மனைவி ஆச்சரியத்துடன், "ஏன்? தன் அண்ணாவின் சம்சாரத்தைத்தானே பார்க்கப் போகிறாள், அதில் என்ன தப்பு" என்று கேட்டாள்.

"தப்போ, சரியோ அதை யெல்லாம் விளக்கிக் கொண்டிருக்க எனக்கு நேரமில்லை. விந்து என் பேச்சைக் கேட்கா விட்டால், அவள் அப்புறம் இந்த வீட்டுக்குள் ஒரு போதும் வரக் கூடாது. அவ்வளவுதான்."

ஹரிபாபுவின் சுபாவம் விந்துவுக்குத் தெரியாததல்ல. அவள் வாய் பேசாமல் துணிமணி அலங்காரங்களை யெல்லாம் நீக்கிவிட்டாள். இதை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த காசிநாதன் வாய் திறக்கவில்லை. பேசாமல் வண்டியில் போய் உட்கார்ந்து கொண்டான்.

தனியாய் வீடு திரும்பிய கணவனைப் பார்த்த கமலா, " ஏன் நாத்தனுர் வரவில்லையா ?" என்று கேட்டாள்.

காசிநாதன் தீனமான குரலில், " அவர்கள் அனுப்ப வில்லை " என்ருன்

" ஏன் ?"

" தெரியவில்லை ; ஒருவேளை இங்கே அனுப்ப அவர் களுக்கு வெட்கமா யிருக்கலாம்."

இந்த வார்த்தைகள் கமலவின் இதயத்தை ' சுரீல் ' என்று துளைத்தன.

# அத்தியாயம் 4

கமலா, ஜமீன்தார் பிரிய பாபுவின் ஏக புத்திரி. அவர் முதலில் இருவரை மணந்தார். ஆனால், அவ்விரு வருக்கும் சந்தானமில்லை. இரண்டு மனைவிகளும் இறந்து போனார்கள். அந்தத் துக்கத்தோடு விருத்தாப்பிய தசையில், மூன்றாவது விவாகம் செய்து கொண்டார். அதன் பலன்தான் இந்த ஏக கன்யாரத்தினம். புத்திர பாக்கியமே இல்லாதிருந்து குழந்தை பிறந்து விட்ட படியால், பெண், ஆண் என்று அவர் வித்தியாசமே பாராட்ட வில்லை. ஆகையால், வீட்டில் கமலா எஜமானருக்கு எஜமானராகவும், எஜமானிக்கு எஜமானி யாகவு மிருந்தாள். அவளுடைய பேச்சைத் தட்டவோ அவள் இஷ்டத்துக்கு மாறாக நடக்கவோ, யாருக்குமே துணிவு கிடையாது. கமலா பணக்காரி, படித்தவள், அழகி, குணவதி, சகல விஷயங்களிலும் அவள் தனி அரசு செலுத்தினாள்.

இருந்தாலும், ஒரே ஒரு மனிதனைமட்டில் அவளால் வசப்படுத்த முடியவில்லை. அந்த மனிதன் வேறு யாரு மல்ல ; அவளுடைய கணவனான காசிநாதன்தான். கமலா எவ்வளவோ உபாயங்களை அனுஷ்டித்துப் பார்த்தாள் ; கோபித்தாள்; துக்கித்தாள்; கொஞ்சினாள் ; கெஞ்சினாள் ; பணிவிடை செய்தாள். ஆனால், எந்த விதத்திலும் புருஷனின் மனதை வசப்படுத்த அவளால் முடியவில்லை ; துளிக்கூட முடியவில்லை. அவன் ஒரு ஏழை மனிதன்தான். ஆனால், மனது ரொம்பவும் பண்பட்டது. இப்பேர்ப்பட்டவன் தனக்குக் கணவனாக வாய்த்திருப்பதை, அவள் எவ்விதத்தும் உணர முடியவில்லை. "பகவானே! அவருடைய உள்ளத்தை எனக்குக் கொடு" என்று தினம் இரு-

வேளையும் பிரார்த்தனை செய்து வந்தாள். "ஒரு வேளை அவருக்கு இதயமே இல்லையோ? அதனால்தான் நான் அதை அடைய முடியவில்லையோ?" என்று சில சமயம் எண்ணுவாள். கமலாவுக்கு அவளுடைய கணவன் ஒரு புதிராயிருந்தான். நாட்கள் செல்லச் செல்ல, அவன் உள்ளத்தை எட்டிப் பிடிக்க அவள் நடந்த பாதையும் நீண்டு கொண்டே யிருந்தது; கஷ்டம் அதிகரித்தது. இவ்வளவு அதிகமான கணவனின் அன்பு வேறு ஒரு ஸ்திரீக்கும் கிடைக்காது என்று ஒரு கணம் எண்ணுவாள். ஆனால் அடுத்த வினாடியிலே, இவ்வளவு பயங்கரமான திரஸ்காரம் வேறு எந்தப் பெண்ணின் தலைவிதியிலுமிருக்காது என்று தீர்மானிப்பாள். எப்படியோ கமலாவின் நாட்களும் கழியத் தொடங்கின. கழியாததெல்லாம் காசிநாதனுக்குத்தான். அவனுக்குப் புஸ்தகம் படிப்பதிலே இப்போது மனம் லயிக்கவில்லை: சும்மா உட்கார்ந்து கொண்டிருப்பதிலும் ஆனந்தம் உண்டாகவில்லை; சம்பாஷணை, சிரிப்பு, விநோதங்களிலும் ரஸம் இல்லை. கொழு கொழு என்றிருந்த அவனது சரீரம் மெலிய ஆரம்பித்தது; சிவப்பு நிறம் கருப்பாக மாறத் தொடங்கியது. கணவனின் தேகம் நாளுக்கு நாள் இப்படி மாறுவதைக் கண்ட கமலா, தலையில் அடித்துக் கொண்டாள். இந்த விஷயமாக ஒன்றும் கேட்பதில்லை என்று முதலில் பிரதிக்ஞை செய்தாள். ஆனால் இந்தப் பிரதிக்ஞையைக் காப்பாற்ற முடியவில்லை. ஒரு நாள் புருஷன் வந்ததும், அவள் அவனுடைய காலில் விழுந்து அழத் தொடங்கினாள்.

"என்ன நடந்தது, ஏன் அழுகிறாய்?"

கமலா ஒன்றும் பேசவில்லை. வெகு நேரம் வரையிலும் அழுதுவிட்டு மறுபடியும் அவனது பாதத்தின் மேல் தனது சிரசை வைத்துக்கொண்டு, "என்னை நீங்கள் அடியோடு கொன்று விடுங்கள். கொஞ்சங் கொஞ்சமாக இப்படி வதைக்காதீர்கள்" என்றாள்.

காசிநாதன் திடுக்கிட்டான். "விஷயம் என்ன, சொல்? நான் என்ன செய்தேன்?" என்ருன்.

"செய்வது உங்களுக்குத் தெரியாதா?"

"எனக்கு ஒன்றும் தெரியவில்லையே?"

"இஷ்டம்போல் நடவுங்கள். ஆனுல் நான் நிற்ப தற்குத் துளி இடம் தாருங்கள். வேறு ஒன்றும் நான் கேட்கவில்லை.

கமலாவைக் காசிநாதன் வாரித் தூக்கி, அருகிலே உட்கார வைத்து, மிகுந்த அன்புடன், "என்ன நடந்தது? விளக்கமாகச் சொல்லு" என்ருன்.

"நீங்கள் ஏன் நாளுக்கு நாள் இப்படிப் போகி றீர்கள்?"

"எனது தேகம் ரொம்ப இளைத்து விட்டதா?"

கமலா கண்ணிலே முந்தானையை வைத்துக் கொண்டு அழுதபடி யிருந்தாள். அந்த நிலையிலேயே தலையை அசைத்து, "ஆம், இளைத்துத்தான் விட்டீர்கள்" என்ருள்.

"அது எனக்கும் தெரியும். ஆனுல் நான் என்ன செய்யட்டும், நீயே சொல்லு."

கமலா முகத்தை உயர்த்தி "மருந்து சாப்பிடுங்கள்" என்ருள்.

காசிநாதன் சிரித்துக் கொண்டு, "மருந்தால் இது சௌக்கியமாகாது" என்ருன்.

"பின்னே எதால் ஆகும்?"

"தெரியாது."

"மருந்தால் குணப்படாது; பின் எதனுல் குணப் படும் என்று கேட்டால், அதுவும் தெரியாது! அப்படி யானுல் என் கதி அதோகதிதானு?"

காசிநாதன் சமஸ்கிருதப் பள்ளிக்கூடத்தில் படித்த சாதாரண மனிதன். அன்பு, காதல் இவற்றின் தன்மைகளைச் சற்றும் அறியாதவன். காதல் சம்பாஷணை புரிய அவனால் முடியாது. அப்படி யிருந்தும், அவன்கூட இந்தச் சமயத்தில் இயற்கையான அன்பினால் தன்மயம் ஆகி, கமலாவின் கரத்தைப் பிடித்துக் கொண்டு, அவள் கண்ணைத் துடைத்துவிட்டு, " இங்கே எனக்குச் சுகம் கிடைப்பதில்லை — அதனால்தான் நான் இப்போது இளைக்கிறேனோ என்னவோ " என்றான்.

" சுகம் கிடைக்கவில்லையானால், இங்கே ஏன் இருக்கிறீர்கள் ?"

" இருக்காமல் வேறு எங்கே போவது ?"

" இதைத்தவிர, வேறு எங்கும் உங்களுக்குப் புகல் இடமில்லையா ? எங்கே ஆனந்தம் கிடைக்குமோ அங்கே போய் வசியுங்களேன் ?"

" அது முடியாது."

" ஏன் முடியாது ?"

" இங்கே வசிக்க மாட்டேனென்றால், மாமனார் சம்மதிப்பாரா ?"

" ஆனால், நீங்கள் இவ்விதம் இளைத்து இளைத்துத் துரும்பாய் போனால், அவருக்கு நன்றாயிருக்குமா ?

" நன்றாயிருக்காது ; ஆனால் வழி என்ன ? உன் தகப்பனார் ஒரு ஏழையைப் பார்த்து......... "

காசியின் முகத்திலே கையைவைத்து மூடிய கமலா, மேலே அவன் சொல்லப் போவதைத் தடுத்தாள் ; " ஈசுவரா ! இப்படிப் பேசாதீர்கள். என்னிடம் எல்லாவற்றையும் சொல்லுங்கள். நான் ஏதாவது வழி தேடுகிறேன் " என்றாள்.

காசிநாதன் சற்று யோசித்த பின், "எல்லா விஷயத்தையும் உன்னிடம் சொல்ல முடியாது" என்முன். பிறகு கொஞ்ச நேரம் மௌனமாக இருந்து விட்டு, "இதையெல்லாம் பார்க்கையில் உனக்கும் எனக்கும் கலியாணம் ஆகாதிருந்தால் நன்றுயிருந் திருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது" என்முன்.

"ஏன் ?"

"நீயே சொல்லு, என்னை அடைந்து நீ ஒரு நாளாவது சுகம் பெற்முயா ? எனக்குப் பிரேமையின் தன்மை தெரியாது ; அன்பும் ஆதரவும் தெரியாது ; நல்லதொன்றுமே தெரியாது. இந்த வயதிலே உனக்கு எத்தனை ஆசைகள், அபிலாஷைகள் இருக்கின்றனவோ ! அவைகளில் ஒன்முவது என்முல் பூர்த்தியாயிற்று ? நான் உனது கணவன் அல்ல ; கணவனைப் போல் தோன்றும் ஒரு நிழலாகவே யிருக்கிறேன்."

கமலாவின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. ஒரே ஒரு வார்த்தை மட்டில் அவளுடைய இருதயத்தின் அடியிலிருந்து வெளிக் கிளம்புவதற்கு இதுவரையிலும் அலைமோதிக் கொண்டிருந்தது. காற்றே இல்லாத ஓர் அறையில் பலவந்தமாய் அமுக்கி வைக்கப்பட்ட ஒரு பூஞ்செடி போல் அது தத்தளித்துக் கொண்டிருந்தது. "என்னிடம் நீங்கள் கொஞ்சம் கண்ணிரங்க முடியாதா ?" என்முள் நடுங்கிக் கொண்டே.

"இதை வேறு எப்போதாவது சொல்லுகிறேன்."

"சொல்ல வேண்டாம் — என்னைக் கல்யாணம் செய்து கொண்டு நீங்கள் சுகமடையவில்லையா ?"

"எனக் கொன்றும் தெரியவில்லை. அப்படித்தானே என்னவோ ?"

"ஆனுல் வேறு யாரையாவது விவாகம் செய்து கொண்டிருந்தால், சுகமடைந்திருப்பீர்களா ?"

" அதையும் நிச்சயமாகச் சொல்லமுடியாது."

இதைக் கேட்டுக் கமலாவின் தேகம் முழுவதும் எரியத் தொடங்கியது. இந்தச் சமயம் வேலைக்காரி வந்து, " அம்மாவுக்குப் பலமாகக் காய்ச்சல் வந்திருக்கிறது—அவர்கள் உங்களைக் கூப்பிடுகிறார்கள் " என்றாள்

கமலா கண்ணைத் துடைத்துக் கொண்டு வெளியில் போய் விட்டாள்.

# அத்தியாயம் 5

கமலாவின் தாயாருக்கு நோய் குணமடையவில்லை. பதினைந்து நாள் அவதிப்பட்டு, கடைசியில் எல்லோரையும் கதறவிட்டு அவள் இந்த உலகத்திலிருந்து சென்றுவிட்டாள். மனைவியிறந்த சோகத்தால் பிரிய பாபுவுக்கு அளவிலாத துக்கம் ஏற்பட்டது. இந்தக் கிழவயதில் தாம் இனி அதிக நாள் ஜீவியவந்தராய் இருக்கமுடியாது என்று அவருக்குத் தோன்றியது. இப்பொழுது வீட்டு வேலை எல்லாம் கமலா தலையில் விழுந்தது. உலகத்திலே தனது சுகத்தைத் தேடுவதைவிட, ஒரு மனிதன் அல்லது ஸ்திரீ செய்ய வேண்டிய கடமைகள் வேறு எவ்வளவோ இருக்கின்றன. வயோதிகத் தந்தை ரொம்பப் பலவீனமடைந்து கொண்டிருந்தார். ஆகையால், இப்பொழுது கமலா அவரருகிலே இருக்கத் தொடங்கினாள். ஆனால், காசிநாதனோ ? அவன் இந்த உலகத்துக்கு வெகு தூரத்திலிருந்தான் ! சமயம் கிடைத்த போதெல்லாம், புஸ்தக மூட்டையை எடுத்துக் கொண்டு, தன் அறைக்குள் சென்று தாளிட்டுக் கொண்டு படிக்க உட்கார்ந்து விடுவான். புஸ்கத்திலிருந்து மனம் விடுபடும் போது வெளிக் காற்று வாங்கப் போவான். சில சமயங்களில் இரண்டொரு நாள் வரையிலும் வீட்டுக்கு வருவதில்லை. எங்கே சாப்பிடுகிறானோ, எங்கே உறங்குகிறானோ—எவருக்கும் ஒன்று தெரியாது. இதையெல்லாம் கண்டு கமலா மனம் சோர்ந்து போனாள். யுவதியாயிருந்தால் கூட, அவள் இன்னும் ஒரு சின்னஞ்சிறு சிறுமி போலத்தான் இருந்தாள். கணவன் மீது அன்பும் பக்தியும் கொள்வதென்றால் என்ன ? அதை இதுவரையிலும் அறிந்திருக்கவில்லை. தன் வாழ்விலே ஒரு குறை நேர்ந்துவிட்டது. அதுவும் புருஷனால்தான் என்று மட்டும் அவளுக்குத்

தோன்றிற்று. இதிலே அவள் பேரில் என்ன குற்றம் ? கற்றிருந்த கல்வியையும் கொஞ்சம் கொஞ்சமாக மறக்கத் தொடங்கினாள். அவள் இருதயத்திலே அமுங்கிக்கிடந்த பொன் அலைகள் வீசத் தலைப்படவில்லை. வெளி அழகுகள் பிரதி பிம்பிக்காமல், அசட்டையாலும் அசிரத்தை யாலும் அழியத் தொடங்கின. இறுதியாக அது எப்போது அறவே அழிந்தது என்பது கமலாவுக்கே தெரியாது. கடைசியிலே ஒரு இடிந்த கட்டிடத்தின் இரண்டு மூன்று செங்கல்லும், நாலைந்து கம்புகளும் கற்களும் இங்குமங்கும் சிதறிக் கிடப்பதைத்தான் தன் உள்ளக் கோயிலிலே அவள் கண்டாள். ஆனால், அவைகளெல்லாவற்றையும் சேர்த்து இணைத்து மறுபடியும் ஒரு கூரையாக்குவதற்கு அவளுக்கு விருப்ப மில்லை; சாமர்த்தியமும் போதாது. இங்கே ஒரு காலத்தில் ஒரு அரண்மனை இருந்தது; உல்லாச மாளிகை இருந்தது. கனவின் மயக்கத்தில் அது வந்தது; கனவு கலைந்தபின் அது போய்விட்டது. இனியும் அந்த ஸ்வப்பனத்தைக் காணுவோம் என்ற விருப்பம்கூட அவளுக்கு இல்லை. போனது போனதுதான். கிழத் தந்தைக்குச் சேவை செய்வது, வேலைக்கார வேலைக்காரி களை மேற்பார்வை பார்த்துக்கொள்வது—இந்தக் கர்ம சுகத்திலேயே அவளுடைய நாட்கள் கழிந்துகொண் டிருந்தன. ஆனால் ஒருவருக்கு ஒன்றில் கிடைக்கும் சுகம் மற்றவருக்குக் கிடைப்பதில்லை. கமலா அனுபவித்துக் கொண்டிருந்த சுகத்தில் கிழ வேலைக்காரி துக்கமடைந் தாள். ரொம்ப நிதானித்துப் பார்த்து, கடைசியாக ஒரு நாள் தனியே பிரிய பாபுவைக் கண்டு, “சின்ன எஜ மானர் ஏனோ இப்படி இருக்கிறாரே ! வீட்டில் தங்குவது கூட இல்லை. அடிக்கடி வெளியே போய் விடுகிறார். எங்கே போகிறார், என்ன செய்கிறார் என்று வீட்டில் உள்ளவர்களுக்கு ஒன்றுமே தெரிவதில்லை. தங்கள் மகளிடத்தில்கூட பேசுவதில்லை போலிருக்கிறது” என்றாள்.

பிரியபாபு தேக அசௌக்கியத்தினால் பெரிதும் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தார். ஆகையால், இதெல்லாம் அவருக்குத் தெரியாது. கிழவியின் வார்த்தைகள் அவரது மனத்திலே கிளர்ச்சி உண்டு பண்ணிவிட்டது. கமலா வந்ததும், அவர் மிகுந்த அன்புடன், "அம்மா, நான் கேட்கும் சில கேள்விகளுக்குச் சரியாய்ப் பதில் சொல்லுவாயா?" என்றார்.

தந்தையின் முகத்தைக் கமலா உற்றுப் பார்த்தவண்ணம், 'என்ன விஷயம், அப்பா?" என்றாள்.

"இங்கே பார்! என்னிடம் நீ வெட்கப்பட வேண்டியதில்லை. உன் மனக்குறைகளைத் தகப்பனிடம் எதற்காக ஒளிக்கவேண்டும்? உன் துயரங்களை என்னிடம் உள்ளது உள்ளபடி சொல்லு. அனைத்தையும் தீர்த்து வைக்கிறேன்.

கமலா மௌனமாக இருந்தாள். பிரிய பாபு மறுபடியும், "நீ சுகமா யிருக்க வேண்டுமென்றுதான் உன்னையும் யோக்கியதையுள்ள புருஷனிடம் ஒப்படைத்திருக்கிறேன் கமலா! உன்னைத் தவிர, வேறு யாரிடமும் எதனிடமும் எனக்குப் பாசமில்லை. நீ துக்கமடைவதைப் பார்த்துக்கொண்டே நான் இறந்தால், என் நெஞ்சு வேகாது" என்றார். கிழத் தந்தையின் கண்களில் நீர் வழிந்தது. கமலாவும் கண்ணீர் வடித்தாள். தந்தை, கமலாவின் கண்ணீரைத் துடைத்துவிட்டு, அத்யந்த வாஞ்சையுடன், "உன் மனத்துயரை உள்ளபடி சொல்ல மாட்டாயா?" என்று கேட்டார்.

ஆனால், என்ன சொல்வது என்று கமலாவுக்கு ஒன்றுமே தெரியவில்லை. பாபு சிறிதுநேரம் பேசாமலிருந்து விட்டு, மறுபடியும், "உனக்கும் அவருக்கும் ஏதாவது சச்சரவு நடந்ததா?" என்றார்.

கமலா மனத்துக்குள்ளாக, "எப்பொழுது ஒற்றுமையா யிருந்தோம், சண்டை உண்டாவதற்கு!" என்று

சொல்லிக் கொண்டாள். தலையை அசைத்து, ''இல்லை'' என்றாள்.

"சண்டை நடக்கவில்லையென்றால் பின்னே அவரிடம் நீ பிரியமாய் நடப்பதில்லையா ?''

சொல்லிவிடலாமா என்று ஒருகணம் கமலாவின் உள்ளம் படபடத்தது, அவளால் முடியவில்லை. கணவனை அவள் களிப்பிக்க முடியவில்லை. ஆனால் அதைச் சொல்லுவதற்கு அவள் தயாராக இல்லை. அதனால் தந்தையின் மனம் புண்படும் என்று அவளுக்குத் தோன்றியது, அவள் பேசாமலிருந்தாள். பிரிய பாபு, சோர்ந்த முகத்துடன் சிரித்துக்கொண்டு, "ஆனால், அவர்தான் உன்னிடம் பிரியமாக இல்லையோ ?'' என்று கேட்டார்.

கமலா யோசிக்கத் தொடங்கினாள்.

"என்னை அவர்தான் சந்தோஷமுறச் செய்யாதிருக்கவேண்டும். ஆனால், அது எப்படி ? என்னை எனது கணவர் திருப்திப் படுத்தவில்லையா ?'' என்று நடுங்கிக் கொண்டே, தனது இதயத்தைத் தானே ஊடுருவிப் பார்க்க முயன்றாள். ஆனால், அதன் ஆதங்கமெல்லாம் அடங்கிப்போயிருக்கக் கண்டாள். கண்ணீர் வழியும் கண்களை முந்தானையால் மறைத்துக் கொண்டாள்.

பிரிய பாபு மிகுந்த மனக்குழைவுடன், "அழாதே, அம்மா'' என்றார்.

"அப்பா! என்னைப்போல் துர்ப்பாக்கியவதி யாருமேயில்லை.''

பிரிய பாபு மெதுவாக மகளைத் தம் அருகே அணைத்துக் கொண்டார். மெள்ள மெள்ள ரொம்பக் கோமளமான குரலில், "கமலா! இம்மாதிரி எங்காவது சொல்லுவார்களா ! என் மனங்கோணாமல் நடந்த உத்தம

மனைவியின் மகள் நீ. இன்னமும் தினம் இரவு நேரத்தில் அவள் எனது பாதத்தருகில் வந்து உட்கார்ந்து கொள்ளுகிறாள். உங்களுக்குப் பயந்து கொண்டுதான் பகலில் வருவதில்லை. மாலையாகிவிட்டது. அவள் வந்து உனது பேச்சைக் கேட்டாளானால் ரொம்பத் துக்கமடைவாள் " என்றார்.

அறையில் இருள் பரவிக்கொண்டிருந்தது. கமலா திடுக்கிட்டு, வாஸ்தவத்திலே யாராவது அறைக்குள் வந்திருக்கிறார்களோ என்று பார்த்தாள்! எங்கும் யாரும் இல்லாதிருப்பதைக் கண்டு பயந்தெளிந்தாள். வெளியில் வந்ததும் அவளுடைய கால்கள் நடுங்கின. பாதி ரத்தத்தை யாரோ உறிஞ்சி விட்டதுபோல, தேகம் துர்ப்பலமாய் இருந்தது. அவள் தன் வேலை வெட்டிகளையெல்லாம் முடித்த பிறகு, காசிநாதனின் அறைக்குள் சென்று உட்கார்ந்தாள். அங்கே அவன் தரையில் ஆசனம் விரித்து விளக்கேற்றிப் புஸ்தகத்தைத் திறந்து கொண்டு உட்கார்ந்திருந்தான்.

காசிநாதன் தலையை உயர்த்தி ஆச்சரியத்துடன், " கமலா! நீ வந்திருக்கிறாயா ?" என்றான்.

" உம், நான் வந்திருக்கிறேன்."

" உட்கார் " என்று சொல்லி விட்டு, மறுபடியும் அவன் படிப்பிலே முனைந்தான். கமலா வெகு நேரம் வரையிலும் கணவன் படிப்பதையே பார்த்துக்கொண்டிருந்தாள். அதற்கப்புறம் தனது கையால் அவனது புஸ்தகத்தை மூடிவிட்டாள்.

காசிநாதன் ஆச்சர்யத்துடன் முகத்தை நிமிர்த்தி, " மூடிவிட்டாயே " என்றான்.

" கொஞ்சம் பேசுங்கள், தினம் படிக்கிறீர்கள்; ஒரு நாளைக்குப் படிக்காவிட்டால், ஒன்றும் கெட்டுப் போகாது."

" இதற்காகவா புஸ்தகத்தை மூடிவிட்டாய்!"

" இதற்காக மட்டுமல்ல; நீங்கள் கோபமடைய மாட்டீர்களா, ஏதாவது சொல்மாட்டீர்களா என்று எண்ணியுந்தான்."

காசிநாதன் புன்சிரிப்புடன், " எதற்குக் கோப மடைவது, கமலா? உன்னிடத்தில் எப்பொழுதாவது அப்படி நான் கோபித்திருக்கிறேனா? நீ பேசுவதில்லை, கிட்ட வருவதில்லை; பின்னே படிக்காமல் பொழுதை எப்படி நான் கழிப்பது?" என்றான். பிறகு கொஞ்சம் சிரித்து விட்டு, " எனக்கு ஜுரம் இரண்டு நாளாக. ஒன்றும் சாப்பிடவில்லை. ஆனால் நீ ஏனென்றே கேட்க வில்லை!" என்றான்.

கமலா நிமிர்ந்து பார்த்தாள்—கணவனின் முகம் வாடிப் போயிருந்தது. நெற்றியில் கை வைத்துப் பார்த்தாள்; மிகவும் சூடாக இருந்தது. அவள் கண்ணீர் பெருக்கிய வண்ணம், கணவனின் மடியில் விழுந்து விட்டாள். வெட்கத்தால் இறந்து விடலாமா என்றுகூடத் தோன்றியது. அழுதுகொண்டே, " எனது குற்றத்தை மன்னித்துக் கொள்ளுங்கள். உங்களுடைய சகல பொறுப்புக்களையும் என்னிடமே விட்டுவிடுங்கள்" என்றாள்.

" என்னால் விடமுடியும்; உன்னால் வகிக்க முடியுமா?"

" ஏன் முடியாது?"

" பார்ப்போம்."

" என்னை ஆதரித்து, அபிமானியுங்கள்."

" வெகு நாளைக்கு முன்பே ஆதரித்து அபிமானித்து விட்டேன். ஆனால், அதை உன்னால் அறிந்துகொள்ள முடியவில்லை. இப்பொழுதும் கூடச் சரியாக அறிந்து கொள்ள மாட்டாய்."

விளக்கின் ஒளியிலே அந்த முகத்தைக் கமலா தன் ஆசைதீரப் பார்த்தாள். "அம் முகத்திலே நீறுபூத்த நெருப்பு இருக்கிறது; தேனடையில் மறைந்த மது இருக்கிறது" என்று எண்ணினாள். கணநேரம் தன்னை அவள் மறந்து விட்டாள். மிகுந்த ஆவேசத்துடன், "ஏன் நீங்கள் இத்தனை நாள் வரையிலும் உங்களை அறிந்துகொள்ள விடவில்லை? இத்தனை நாளும் உங்கள் மனதை ஏன் ஒளித்து வைத்துக்கொண்டு என்னை இப்படிச் சீரழித்தீர்கள்?" என்றாள். ஆனந்தத்தால் கணவனை மார்புறத் தழுவிக்கொண்டாள். காசிநாதனுக்குக்கூட அன்று கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது.

# அத்தியாயம் 6

அடுத்த நாள் காசிநாதனைப் பிரியபாபு வரவழைத்து, "அப்பா! என் காலம் ஆகிவிட்டது. எப்பொழுது வேண்டுமானாலும் போய்விடுவேன். வேறே பிள்ளை குட்டிகள் எனக்குக் கிடையாது. நான் வைத்துப் போகும் சொத்தெல்லாம் உனக்குத்தான். ஆகையால், நான் இருக்கிறபோதே எல்லா ஆஸ்தியையும் அறிந்து கொள். இல்லாவிட்டால் ஒன்றையும் காப்பாற்ற முடியாது; ஜனங்கள் ஏமாற்றி விடுவார்கள்" என்றார்.

காசிநாதன் தலையைக் குனிந்து கொண்டு, "சரி; அப்படியே செய்கிறேன்" என்றான்.

"அவ்வளவுதான், நாளையிலிருந்து தினம் கச்சேரிக்குப் போய்வா" என்றார் பிரியபாபு.

"சரி" என்று சொல்லிவிட்டு, காசிநாதன் அகன்றான்.

பிரியபாபு பெண்ணை அழைத்து, "மகளே! எனக்கோ வயதாகிவிட்டது. இனி வேலை வெட்டி ஒன்றையும் கவனிக்க முடியாது. ஆகையால், காசிநாதனிடம் ஜமீன் பொறுப்புக்களையெல்லாம் ஒப்படைத்து விட்டேன். அப்புறம் ஏதும் சிக்கல் ஏற்படாதிருப்பதற்காக, இன்னின்னதை இப்படிச் செய்ய வேண்டும் என்று அவனுக்கு அவ்வப்பொழுது சொல்லிக் கொடுத்து வருவேன்" என்றார்.

வெகுநாள் வரையிலும் காசிநாதனுடன் தாமும் கச்சேரிக்குச் சென்று, ஜமீன் விஷயமான பல விஷயங்களையும் அவனுக்குப் பிரியபாபு சொல்லிக் கொடுத்தார். அவனுக்கும் ஒரு வேலை கிடைக்கவே அதிக சந்தோஷ

மடைந்தான். வீட்டுக்குள்ளே மூண்டு கொண்டிருந்த நெருப்பு வெகுநாளைக்கப்புறம் மெள்ள மெள்ளக் குறையத் தொடங்கியது.

காசிநாதன் இப்பொழுது ஒழுங்காக ஜமீன் காரியங்களைப் பார்த்து வருகிறான். கமலா ஒழுங்காகக் குடும்பத்தைக் கவனித்து வருகிறாள். பிரிய பாபுவும் ஒழுங்காகப் படுக்கையில் படுத்துக் கொண்டிருக்கிறார். இவ்விதம் குடும்பம் சாந்தமாக நடந்து கொண்டிருந்தது.

ஆனால், கொஞ்ச நாளைக்கப்புறம் பிரிய பாபுவின் உடம்பு மிகவும் மோசமான ஸ்திதியை அடையத் தொடங்கியது. அவர் ஒரு நாள் கமலாவை அழைத்து "நான் ஒரு உயில் எழுதி வைத்திருக்கிறேன்" என்று சொல்லி, தலையணைக்கடியிலிருந்து ஒரு பத்திரத்தை எடுத்துப் படிக்கலானார்: "நான் எனது ஸ்தாவர ஜங்கம சொத்து முழுவதிலும் பாதிப் பாகம் எனது மருமகன் காசிநாதனுக்கும் மீதிப் பாதியை எனது குமாரி கமலா தேவிக்கும் கொடுத்துப் போகிறேன்—ஏன் அம்மா! சரியா?" என்றார்.

கமலா ஒரு பதிலும் அளிக்கவில்லை. பிரியபாபு ஆச்சரியமடைந்து, "ஏன் அம்மா! உனக்குப் பிடிக்க வில்லையா?" என்றார்.

அவர் இந்த உயில் எழுதியதே கமலாவை சந்தோஷப்படுத்த வேண்டும் என்றுதான். சொத்துப் பூராவும் காசிநாதன் பேரிலிருந்தாலே கமலா சந்தோஷ மடைவாள் என்று எண்ணினார். ஆனால், கமலா யோசித்துக் கொண்டிருந்ததைச் சொல்ல வெட்கப் பட்டாள். பிரியபாபு, "ஏதாவது சொல்லணுமா, அம்மா?" என்று மறுபடியும் கேட்டார்.

கமலா தலையை அசைத்து, "ஆம்" என்றாள்.

"என்ன அம்மா?"

கமலா சற்று இங்கு மங்கும் பார்த்து விட்டு, " சகல சொத்துக்களையும் என் பெயருக்கே எழுதி விடுங்கள் " என்றாள்.

" அதேன் இப்படிக் கேட்கிறாய் ?"

கமலா முகத்தைத் தொங்கவிட்டு உட்கார்ந்து கொண்டாள்.

பிரியபாபு பழைய காலத்து மனிதரானாலும், அவரும் தற்காலத்திய விஷயங்களை எல்லாம் கண்டும் கேட்டும் இருக்கிறார். கமலாவின் மனதிலுள்ள எண்ணத்தை அவர் அறிந்து கொண்டார். அவள் பேசிய எல்லா வார்த்தைகளையும், ஒவ்வொரு வார்த்தையாக அர்த்தம் பிரித்துக் கூட்டி அவளுடைய மனதின் ரகஸ்யத்தை அறியத் தொடங்கவும், கொஞ்சம் கொஞ்சமாக அவருக்குக் களைப்பு மேலிட்டது. உட்காருவதற்கு ஆதரவாக வைத்துக் கொண்டிருந்த தலையணையின் மேலே தலைவைத்து, அவர் கண்ணை மூடிப் படுத்துக் கொண்டார்.

வெகுநேரம் வரையிலும் மௌனமாக இருந்து விட்டு, " நீ எனது ஒரே மகள் ; உன் மனசு துக்கமடைய நான் விரும்பவில்லை. எல்லா சொத்துக்களையும் உனக்கே கொடுத்துவிட்டுப் போகிறேன். ஆனால், அது அவ்வளவு நன்றாயில்லை. இருந்தாலும், நான் ஆசீர்வாதம் செய்கிறேன் : நீ சுகமாயிருக்க வேண்டும். இதில் எனக்கென்னவோ நம்பிக்கையில்லை. என் ஆயுள் காலத்தில் எத்தனையோ நிகழ்ச்சிகளை நான் கண்டும் கேட்டும் இருக்கிறேன். நானே மூன்று தரம் விவாகம் செய்து கொண்டிருக்கிறேன். உன்மாதிரி மனதுடைய பெண் ஒருபோதும் சுகமடைய முடியாது " என்றார். பிறகு கொஞ்ச நேரம் சும்மா இருந்துவிட்டு மறுபடியும் சொல்லலானார். " பார்ப்போருக்கு நன்றாயிருக்கும், நீயும் சந்தோஷமடைவாய் என்று நினைத்தே, இரண்டு

பேருக்கும் பாதி பாதியாக என் சொத்தை நான் எழுதி வைத்தேன். அவன் வேறே, நீ வேறே அல்ல என்று எண்ணினேன். சரி, இதை நீதான் சொல்லு ; அவனுக்குக் கொடுப்பதை நீ ஏன் தடுக்கிறாய் ?''

துக்கம் தொண்டையை அடைக்க. "சொத்துக் கிடைத்து விட்டால், என்னை யாரும் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டார்கள் " என்றாள் கமலா.

" சொத்துக் கிடைக்காவிட்டால் ?"

" அவர் என் கைக்குள் இருப்பார். "

" எனக்குக் காசிநாதனைத் தெரியும் ; நீ அவனை அறிந்து கொள்ளவில்லை. அவன் தன் தந்தையைப் போல் இருக்கிறான். காசிநாதன் உன்னைத் திரும்பியும் பார்க்காதவனாயிருந்தால், சொத்துக் கிடைத்தாலும் பார்க்கமாட்டான் ; சொத்து கிடைக்காமல் போனாலும் பார்க்கமாட்டான். கேளு அம்மா ! இவ்விதமா புருஷனை வசப்படுத்துவது? பலாத்காரத்தினால் காட்டுச் சிங்கத்தை வேண்டுமானாலும், வசப்படுத்தி விடலாம் ; ஆனால், ஒரு சின்னஞ் சிறிய புஷ்பத்தை மலரச் செய்யமுடியாது " என்றார் பிரிய பாபு.

சிறிது நேரம் பேசாமலிருந்து விட்டு, பிரிய பாபு தொடர்ந்து கூறினார் : " நீ வெற்றியடைய வேண்டுமென்று பகவானிடம் பிரார்த்திக்கிறேன். ஆனால், இது சிறந்த வழியல்ல. அவன் தானாக உன் வசமாகாவிட்டால், உன் அருகில் இருந்தும் தான் என்ன பலன்? அவனுக்குப் பாதிச் சொத்து தகாதா ? இன்னும் ஒரு விஷயம் ; மனம், வாக்கு, காயம், இகம், பரம் எல்லாவற்றையுமே கணவனுக்கு ஒப்புவித்தாகி விட்டது. தன்னுடைய சர்வத்தையும் ஒப்புக் கொடுக்கப் பெற்றவனுக்கு, தனது சொத்தில் பாதியைக் கொடுக்க முடியாதா, கமலா ? இம்மாதிரி செய்யாதே, மகளே ! எப்பொழுதாவது

இது அவனுக்குத் தெரிந்தால், அவன் ரொம்பத் துக்கமடைவான்."

கமலா ஒன்றும் பேசவில்லை; பிரியபாபுவும் ஒன்றும் கேட்கவில்லை. இரண்டு பேரும் குறைந்தது அரைமணி நேரம் மௌனமாகவே உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். இருள் சூழ்ந்து கொண்டிருந்தது. வேலைக்காரி அறையில் விளக்கேற்றி வைத்தாள். கமலா கண்ணைத் துடைத்துக் கொண்டு எழுந்து போய் விட்டாள்.

அடுத்த நாள் பிரிய பாபு வக்கீலை அழைத்து, "எனது உயிலை மாற்றுகிறேன்" என்றார்.

"என்ன மாற்றவேண்டும்?" என்று வக்கீல் கேட்டார்.

"மருமகனின் பெயரை அடித்துவிட்டு, எல்லாச் சொத்துக்களையும் பெண்ணுக்கே கொடுக்க விரும்பு கிறேன்."

"ஏன்?"

"இது அனாவசியமான கேள்வி. சொல்லுகிறபடி எழுதிக் கொடுங்கள்."

புதிய உயில் எழுதி முடிந்தது.

# அத்தியாயம் 7

பிரியபாபு இறந்து, சிராத்தம் சம்பிரமமாக முடிந்த பிறகு, உயிலைப் பார்த்து, காசிநாதன் துளியாவது கவலையோ ஆச்சரிமோ அடையவில்லை. உலகத்திலே சகஜமாக எது நடந்து வருகிறதோ, எது நடக்க வேண்டுமோ அதுதான் நடந்திருக்கிறது; இதில் துக்கப் படவோ திடுக்கிடவோ என்ன இருக்கிறது?

ஆனாலும், காசிநாதனிடம் தனிமையில் திவான் சாஹேப், "சின்ன எஜமானரே! பாபு சாஹேப் இப்படி உயில் எழுதி வைத்துப் போவாரென்று நான் கனவில்கூட நினைக்கவில்லை. முதலில் வேறோர் உயில் எழுதியிருந்தார். அதில் தங்களுக்கும் தமது மகளுக்கும் சரிசமமாகத் தம் சொத்தைப் பகிர்ந்து கொடுத்திருந்தார். அதை ஏன் மாற்றினார்? யாருடைய போதனையால் அவரது எண்ணம் இப்படி மாறிவிட்டது? ஒன்றும் தெரியவில்லையே!" என்றார்.

காசிநாதன் புன்சிரிப்புடன், "தெரிய வேண்டிய அவசியம் என்ன? சொத்துக் கிடைக்க வேண்டியவர்களுக்குக் கிடைத்து விட்டது. இதில் உமக்கும் எனக்கும் என்ன மனஸ்தாபம்?" என்றான்.

திவான் கொஞ்சம் வருத்தத்துடன், "ஆனாலும் ஆனாலும்—" என்றார்.

"ஆனாலும் கீனாலும் என்பதற்கெல்லாம் இதில் இடமேயில்லை. வாஸ்தவத்தில் பார்க்கப்போனால், இந்தச் சொத்தில் எனக்கு என்ன உரிமையிருக்கிறது? அவர் இதில் எனக்குப் பாதி கொடுத்துப் போவதும்— அவளுக்குப் பூராவுமே கொடுத்துப் போவதும் இரண்டுமே ஒன்றுதான். வித்தியாசமென்ன?" என்றான்.

திவான் இன்னும் வருத்தமாய்த்தான் இருந்தார். வாடிய முகத்துடன், "இல்லை, இல்லை; வித்தியாசம் ஒன்றுமில்லை — நான் பாபு சாஹேப்பின் போக்கைப் பற்றியே சொல்ல வந்தேன். அவருடைய அசல் அபிப்பிராயம் எனக்கு நன்றாய்த் தெரியும். அதனால்தான் இந்த விஷயத்தைச் சொன்னேன்" என்றார்.

"அவர் தமது கடமையைச் செய்திருக்கிறார். கொஞ்சம் யோசியுங்கள்: மனைவிக்குக் கணவனைத் தவிர, வேறு ஒரு கதியுமில்லை; ஆனால் கணவனுக்கு வேறு கதி இருக்கலாம். நானோ ஏழை; ஒரேயடியாக இத்தனை சொத்தையும் அடைந்துவிட்டால், கெட்டவன் ஆகிவிடவும் கூடும். ஒரு வேளை அந்தப் பயத்தினால் தான் உயிலை அவர் மாற்றியிருப்பார்" என்றான் காசி.

கிழத் திவான் எப்பொழுதும் காசிநாதனை வெறும் முட்டாள் பண்டிதனாகத்தான் எண்ணியிருந்தார். அவன் வாயிலிருந்து இன்று இம்மாதிரி புத்திசாலித்தனமான பேச்சைக் கேட்ட பிறகு, அவனை வாழ்த்துவதைத் தவிர, அவருக்கு வேறு வழியில்லை. இவ்விதம் வயோதிகத் திவான் கொஞ்சம் கொஞ்சமாகக் காசிநாதனின் அறிவை அறியத் தொடங்கினார். ஆனால், கமலா அதற்கு மாறாக, கொஞ்சம் கொஞ்சமாக அவனை அறிய முடியாத அறியாமையில் மூழ்கத் தொடங்கினாள். தினம் நூறு தடவை, "இவர் எப்பேர்ப்பட்ட மனிதர்?" என்று அவள் தன்னைத் தானே கேட்டுக்கொள்வாள். ஆனால், இந்த நூறு கேள்விகளும் பிரயோஜனமற்று, முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு அவளிடமே திரும்பி வந்து, "தெரியவில்லையே!" என்று சொல்லும்.

கமலா எவ்வளவோ யோசித்தும், இந்த மனிதன் எதைச் சாதிப்பதற்காகப் படைக்கப்பட்டான் என்பதை தீர்மானிக்க முடியவில்லை. அவன் மனசைத் தன் சரீரத்துக்குள்ளேதான் வைத்திருக்கிறானா அல்லது

அதை வேறு எங்காவது அடகு வைத்திருக்கிருளு? மற்றவர்களைப் போலத்தான் அவளுடைய கணவனும் கூட இருக்கிருன்; உண்கிருன், உறங்குகிருன், ஜமீன் காரியங்களைக் கவனிக்கிருன், வீட்டு மேல்பார்வை அனைத்தும் செய்கிருன். எல்லா விஷயங்களிலும் மகிழ்ச்சியடைகிருன்; எல்லா விஷயங்களிலும் உதா சீனமாகவுமிருக்கிருன்! தன் கணவனுக்கு என்னதான் பிடிக்கிறது, எந்தப் பொருளின்மேல் அவனுக்கு அதிக விருப்பம் என்பதை அவள் இதுவரையிலும் அறிந்து கொள்ள முடியவில்லை. கமலா எப்பொழுதாவது நோயுற்ருல், காசிநாதன் அவளருகே உட்கார்ந்து கண் விழித்துக்கொண்டிருக்கிருன்—அவனுடைய முகத்திலே தான் இவ்வளவு கடின மிருந்தாலும் இதயத்திலோ அன்பும் காதலும் வெடித்து வெளிக்கிளம்புவதுபோலப் பெருகுகின்றன. ஆனால், நோய் குணமடைந்து அங்கு மிங்கும் உலாவத் தொடங்கிய பின், அவள் எதிர்ப் பட்டால்கூட அவளை அவன் கண்ணெடுத்தும் பார்ப்ப தில்லை; தனது வேலையிலேயே முற்றிலும் அவன் ஈடு பட்டு விடுகிருன். கோபத்திலே இரண்டு நாள் கமலா பேசாமலும் இருந்து பார்ப்பாள்; ஆனால் பலன் ஒன்று மில்லை. காசிநாதன் அருகில் வந்தான்; மறுபடியும் திரும்பிப் போய்விட்டான். வேண்டவில்லை, அழவில்லை, பேசவுமில்லை. மீண்டும் கமலா பேசத் தொடங்கினுல் முன்போலவே புன்சிரிப்புடன் சந்தோஷமாகப் பேசு கிருன். ஒருபோதும் கோபம் காண்பித்ததில்லை. ஏன் இரண்டு நாள் பேசாதிருந்தாய், ஏன் கோபமாக இருந்தாய் என்றும் அவளை அவன் ஒரு நாளும் கேட்டதில்லை. கொஞ்ச நாளைக்கப்புறம் கமலா தன் மனதுக்குள்ளாகவே ஒரு முடிவுக்கு வந்தாள். தன்னை உதாசீனம் செய்யும் கணவனிடம், "நீ என்னைப் பொருட்படுத்தாவிட்டால், நானும் உன்னைப் பொருட்படுத்தமாட்டேன். என்னை உன் காலடியில் நீ நசுக்கிக் கொண்டே யிருப்பது; நான் உனது காலைச் சுற்றிக் கிடப்பதா? அந்த மாதிரிக் காதல்

எனக்கு வேண்டாம்" என்று எப்படியும் அவனிடம் சொல்லிவிட வேண்டியதுதான் என்று அவள் தீர்மானித்துவிட்டாள். அதன் பிறகு கணவனைச் சந்தித்தாலும் கம்பீரமாக முகத்தைத் திருப்பிக்கொண்டு போகத் தொடங்கினாள். "உன்னிடம், இரக்கம் கொண்டே உன்னை என் கணவனாகக் கொண்டிருக்கிறேன். உனது காலடியில் என் பிராணன் விழுந்து கிடப்பதாகவும், ஆகையால் உன்னைக் கண்டபோதெல்லாம் இனிமையான புன்முறுவல் பூப்பேன் என்றும் நினைக்காதே" என்று அவனுக்கு இடித்துக் காட்ட விரும்பினாள்.

கமலா எப்போதாவது வேலைக்காரர்களையோ அல்லது வேலைக்காரிகளையோ திட்டிக் கொண்டிருக்கையில் தன்னையறியாமல் அவர்களுக்குப் பரிந்துகொண்டு காசிநாதன் ஏதாவது சொல்லிவிட்டால், அந்த வார்த்தையைக் கேட்டும் கமலா அசட்டை செய்துவிட்டு முன்போலவே திட்டத் தொடங்குவாள். "என் வேலைக்காரன்; என் வேலைக்காரிகள்; என் மாளிகை— என் இஷ்டப்படி பேசுவேன். நடுவில் வந்து பஞ்சாயத்து செய்ய உன்னை யார் அழைத்தது?" என்று சொல்வது போலிருக்கும் அப்போதெல்லாம் அவளுடைய பாவனை.

ஆனால், இதனாலேயே திருப்தி அடைந்துவிட முடியுமா? தனது உத்தேசம்தான் பூர்த்தியாகிவிடுமா? காசிநாதனைத் துளியாவது இது அசைத்திருந்தால் சற்று திருப்திப்படலாம். யார் என்ன தான் செய்தாலும், அவன், தன் மந்தகாசமான முகத் தோற்றத்தின் மூலம், "என்னை அசைக்க முடியாது. இமயத்தின் சிகரம் போன்ற ஒருவனை லவலேசமும் ஊறு உண்டாக்குவதற்கு உன்னிடம் சக்தி இல்லை. எத்தனை புயல் மழை அடித்தாலும், எத்தனை மரம் செடி கொடிகள் துவம்சம் ஆனாலும், என்னை மட்டில் நீ கொஞ்சமும் அசைக்க முடியாது" என்றே அறிவுறுத்திக் கொண்டிருந்தான்.

சரி ; கமலா காதலிக்கவில்லையா ? காதலிக்கத்தான் காதலிக்கிறாள். ஆனால், அந்தக் காதல் எல்லையற்ற கடலைப் போன்றதல்ல. எல்லை கட்டி, ‘ இதற்குமேல் போகாதே ’ என்ற நிபந்தனைக்குட்பட்டதுபோல் இருந்தது.

ஒரு நாள் கிழ வேலைக்காரியிடம் கமலா தன் துக்கத்தைச் சொல்லி அழுதாள் ; “ அப்பா ” என்னை ஒரு மிருகத்தினிடம் ஒப்படைத்துப் போய்விட்டார் ” என்றாள்.

“ அதென்ன அம்மா ”

“ என்னிடம் என்னவென்று கேட்கிறாய் ? நீங்களெல்லோரும் சேர்ந்து என்னைக் காலையும் கையையும் கட்டிக் கிணற்றிலே போட்டிருக்கலாமே ! அது இதைவிட மேலாயிருக்குமே ?”

“ இம்மாதிரி பேசாதே அம்மா ”

“ ஏன் பேசக்கூடாது ? நீங்கள் செய்த வேலையை, நான் ஒருதரம்கூட வாய் திறந்து சொல்லக் கூடாதா ?”

“ இல்லை, இல்லை ; அப்படியல்ல அவர் ரொம்ப நல்ல மனிதராச்சே, ! ஆனால், கொஞ்சம் பைத்தியம் இருக்கிறது. அவருடைய தகப்பனாரும் சற்றுப் பைத்தியம் தான். ஆகையினால் சின்ன எஜமானரிடமும்...... ”

“ நீ சும்மா இரு. பைத்தியமென்று உளறாதே. தகப்பன் பைத்தியமா யிருந்தால், மகனும் பைத்தியமாகி விடுவதில்லை. இவருக்குப் பைத்தியம் துளிக்கூட இல்லை. என்னை வேண்டுமென்றே இவர் வாதிக்கிறார் !”

கணவன் பைத்தியம் என்று கேட்கவும், கமலாவின் இருதயம் புண்படத் தொடங்கியது.

மூன்று நாளாகக் காசிநாதனின் விஷயம் ஒன்றுமே தெரியவில்லை. இரண்டு நாள் வரையில் வேண்டு

மென்றே கமலா விசாரிக்கவில்லை. ஆனால், மூன்றாம் நாள் அவள் திகிலடைந்து, தர்வானிடம், “பாபு இரண்டு நாளாக வீட்டுக்கு வரவில்லை; நீங்களும் தேடவில்லை. பின்னே நீங்களெல்லாம் எதற்காகத் தான் இங்கே இருக்கிறீர்கள் ?” என்று கோபித்துக் கொண்டு, அவனை வெளியே அனுப்பினாள்.

“யாரோ எங்கேயோ போவார்கள், வருவார்கள். அதை யெல்லாம் நாம் எப்படித் தெரிந்து கொள்ள முடியும் ?” என்று அவன் நினைத்தான்.

கடைசியில் கஜான்சியில் விஷயம் தெரிய வந்தது. சின்ன எஜமான் மூவாயிரம் ரூபாய் வாங்கிக்கொண்டு எங்கேயோ வெளியில் போயிருக்கிறார்; ஆனால், எங்கே போயிருக்கிறார், எப்பொழுது வருவார் என்று தெரியாது. அதை அவர் யாரிடமும் சொல்லிப் போகவில்லை.

இந்தத் தகவலைக் கேட்ட கமலா கொஞ்சநேரம் நெற்றியின் மேல் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். பிறகு, தனது தந்தையின் வக்கீலைக் கூப்பிட்டு, “எனது ஜமீன் காரியங்களை யெல்லாம் நிர்வகிக்க ஒருவர் வேண்டும். யோக்யமான ஓர் ஆளை ஒரு வாரத்துக்குள் நீங்கள் ஏற்பாடு செய்யுங்கள். சம்பளம் எத்தனையானாலும் கொடுத்து விடுகிறேன்” என்றாள்.

# அத்தியாயம் 8

காசிநாதன் கல்கத்தா வந்து சேர்ந்தான். பகல் பூராவும் மழையில் நனைந்து, சேற்றையும் சகதியையும் தாண்டிக் கொண்டு மாலையில் ஒரு சிறிய சந்தில் சாதாரணமானதொரு வீட்டிற்குள்ளே பிரவேசித்தான். அவனது கையில் இரண்டு மருந்து புட்டிகளும் ஒரு டின் பிஸ்கோத்தும் இருந்தன ; மேல் வேஷ்டியில் மாதுளை முதலிய சில பழங்கள் இருந்தன.

அந்த வீட்டில் ஓர் அறையில் ஒரு நோயாளி படுத்துக் கொண்டிருந்தான். அவனது தலைமாட்டிலே ஒரு ஸ்திரீ உட்கார்ந்து அவனது நெற்றியைப் பிடித்துக் கொண்டிருந்தாள். காசிநாதன் நுழைந்ததும், "காசி அண்ணு, இந்த மழையிலே ஏன் நனைந்து கொண்டு வந்தாய்? எங்கேயாவது நின்று விட்டு வரக் கூடாதா?" என்று அவள் கேட்டாள்.

"அதெப்படி முடியும்? மழையிலே நனைவதால் உண்டாகும் கஷ்டத்தைவிட, நின்றிருந்தால் வேதனையே அதிகமாயிருக்கும்."

விந்து யோசித்துப் பார்த்தாள். காசி அண்ணுவின் பேச்சுப் பொய்யல்ல. ஆகையால் அவள் பேசாமலிருந்து விட்டாள்.

சென்ற பல வருஷங்களாக விந்து எத்தகைய கஷ்டத்தை அனுபவித்து வருகிருள் என்பது அவளுக்குத் தான் தெரியும். அவளை நாம் அவளுடைய தாயார் வீட்டிலே பார்த்தோம் ; அப்புறம் பார்க்கவில்லை. இப்பொழுது அவளைப் பற்றிக் கொஞ்சம் சொல்லியாக வேண்டும். என்றைக்கு ஜமீன்தார் வீட்டுப் பெண்ணைப் பார்க்கப்போகத் தான் தயாராக இருந்தும் அவள்

செல்ல முடியவில்லையோ அதற்கு அடுத்த நாளே, தனது மாமனார் கோபால் பாபுவின் கடுமையான நோயைக் கேள்வியுற்று மாமனார் வீட்டுக்கு உடனே வர நேர்ந்தது. அவளுடைய மாமனார் உண்மையிலேயே அதிக நோயா யிருப்பதைக் கண்டாள். எல்லோரும் சேர்ந்து கூடுமான வரையிலும் சிகிச்சை செய்தார்கள் ஆனால், கோபால் பாபுவை எந்த விதத்திலும் பிழைப்பிக்க முடியவில்லை. நோய் அளவு மீறி விட்டதால், கோபால் பாபு "சின்ன மருமகளைக் கொஞ்சம் என் அருகில் அழையுங்கள்—அவளை ஒரு தரம் பார்க்கிறேன்" என்றார்.

சிறிய மருமகள் நமது விந்துவாசினிதான். இறப்பதற்கு இரண்டொரு நாளைக்கு முந்தி, விந்துவினிடம் கோபால்பாபு, "அம்மா! இந்தா சாவி, அந்தப் பெட்டியில் இருப்பதெல்லாம் உனக்கே சொந்தம். எடுத்துக்கொள்" என்றார்.

விந்து கைநீட்டி அதை வாங்கிக் கொண்டாள். "கிழவன் சாகும்போது தனது சகல சொத்தையும் சின்ன மருமகளுக்கே கொடுத்துவிட்டுப் போய்விட்டான்" என்று இரண்டாம் மருமகள் நினைத்துக்கொண்டாள்.

இன்னும் ஒரு விஷயம்; கோபால் பாபு நோய்ப் படுக்கையிலிருக்கையில், ஒரு நாள் தமது நான்கு புதல்வர்களையும் அருகில் அழைத்து, "பாருங்கள், உங்களுக்குள் துளிக்கூட ஒற்றுமையில்லை; உங்கள் அம்மாவும் உயிரோடில்லை. ஆகையால், நான் இறந்த பிறகு நீங்கள் ஒரே குடும்பமாக இருக்கவேண்டாம். சூதும் வாதும் பேசிச் சண்டை சச்சரவுகள் செய்துகொள்வதற்கு முன்பே ஏதோ இருக்கிற சொத்தைப் பிரித்துக்கொண்டு தனித் தனியாகப் போய்விடுங்கள். நான் வைத்து விட்டுப் போவதோடு இன்னும் சொற்ப வருமானம் வந்தாலும் போதும்; சுலபமாகக் காலந்தள்ளுவீர்கள்" என்று உபதேசித்தார்.

தந்தை இறந்த பிறகு நான்கு சகோதரர்களும் தனித்தனியாகப் பிரிந்துவிட்டார்கள். விந்து ஒரு நாள் அந்தப் பெட்டியைத் திறந்தாள்; அதிலே ஒரு 'ராமாயண'ப் புத்தகமும், ஒரு 'மகாபாரத'ப் புத்தகமும் தவிர, வேறு ஒன்றையும் காணேம். ஆசை நிராசையானாலும் கூட, காலஞ்சென்ற மாமனாரின் வெகுமதியை விந்து தன் கண்ணிலே ஒற்றிக் கொண்டாள். தழதழத்த குரலில், "இது அவருடைய அன்பின் பரிசு—இதுவே நமக்கு விலையுயர்ந்த ரத்தினம்" என்று தனக்குத் தானே அவள் சொல்லிக்கொண்டாள்.

விந்து சிலநாள் சுகமாக இருந்தாள். அதற்கப்புறம் ஆபத்தின் அறிகுறி தென்பட்டது. அவளுடைய கணவன் யகேஷ் பாபு நோயில் விழுந்தார். அவள் தனது உடலைப் பொருட்படுத்தாமல் கணவனுக்கு சேவை புரிந்தாள். நிலத்தை அடகு வைத்து வைத்தியம் பார்த்தாள். ஆனல் அவர் எந்தவிதத்திலும் குணம் அடையவில்லை. கிராமத்தில் அக்கம்பக்கத்தார்கள், "கல்கத்தாவுக்கு அழைத்துப்போய் வைத்தியம் பார்க்க வேண்டும்" என்று யோசனை சொன்னார்கள். அப்பொழுது விந்து தன்னிடமிருந்த நகை நட்டுகளை யெல்லாம் விற்று, கணவனை கல்கத்தாவுக்குக் கூட்டிச் சென்றாள். அங்கே பலவிதமான வைத்தியம் நடந்தது; மிஞ்சியிருந்த நகைகளும் அடமானமாயின. ஆனல், நோய் துளியும் அசைந்து கொடுக்கவில்லை. பணக் கஷ்டத்தினல், இப்பொழுது அவ்வளவு நன்றாக வைத்தியமும் செய்ய முடியவில்லை. விந்து தனது பெரிய மைத்துனருக்கு எல்லா விவரங்களையும் எழுதினாள். ஆனல் ஒரு பலனும் உண்டாகவில்லை. அப்புறம் அவருக்கு இளைய இரண்டு மைத்துனர்களுக்கும் அவள் எழுதினாள். அவர்களும் தங்களுடைய தமையனைப் போலவே மௌனம் சாதித்துவிட்டார்கள். இப்பொழுது ஒன்று, வேறு ஏதாவது வழி செய்தாக வேண்டும்;

அல்லது விஷத்தைத் தின்று இறக்கவேண்டியதுதான் என்று முடிவு செய்து கொண்டாள்.

மனைவியின் முகத்தைக் கண்டு, யகேஷ் பாபு அவளது வேதனையை அறிந்து கொண்டார். ஒரு நாள் விந்துவைத் தமது அருகில் அழைத்து, உட்காரவைத்து, ரொம்ப அன்புடன் கையைப் பிடித்துக்கொண்டு "விந்து! என்னைக் கிராமத்துக்கு அழைத்துப் போ; இறப்பதானால், அங்கேயே இறக்கிறேன்—இங்கே இறந்தால், தூக்குவதற்குக் கூட ஆள் கிடைக்காது" என்றார்.

இறப்பது திண்ணம்; ஏனென்றால், வேறு உபாய மில்லை என்று விந்து அறிந்தாள். கணவனை கிராமத்துக்குக் கூட்டிப் போவதற்குக்கூட ஒரு வழியுமில்லை. ஆனால், கணவனை இம்மாதிரி நிலையில் விட்டுவிட்டு அவளால் எப்படி இறக்க முடியும்? அவர் இறப்பது நிச்சயமே யானால், பின்னே வெட்கப்பட்டு என்ன ஆகும்? தீர யோசித்து வெட்கத்தை தூரக் கட்டிவைத்துவிட்டு, காசிநாதனுக்குக் கடிதம் எழுதி, அதில் அவள் எல்லா விஷயமும் தெரிவித்திருந்தாள். அப்புறம் நடந்த தெல்லாம் நமக்கே தெரியும். வரும்போது காசிநாதன் போதிய பணம் கொண்டு வந்திருந்தான். அந்தப் பணத்தைக் கொண்டு நகரத்தின் சிறந்த டாக்டர்கள் பலரைக் காசிநாதன் கலந்தான். இனி இடம் மாற்றா விட்டால், குணமாகாது என்று எல்லோரும் சொன்னார்கள். விந்துவையும் யகேஷ் பாபுவையும் பிறரையும் அழைத்துக்கொண்டு, வைத்தியநாத் என்னுமிடத்துக்கு, காசிநாதன் சென்றான். அங்கே இரண்டு மாதம் இருந்து பார்க்கவே, "இந்தத் தடவை யகேஷ் பாபு தப்பித்துக் கொண்டார்" என்று எல்லோரும் அறிந்தார்கள். ஆனாலும், அங்கே யிருந்து திரும்புவதற்குச் சிறிதுகாலம் பிடிக்குமாதலால், அவர்களை அங்கேயே விட்டு விட்டு காசிநாதன் மட்டும் வீடு திரும்பினான்.

கமலா அதிகாலையில் கணவனைச் சந்தித்ததும், "எப்போது வந்தீர்கள் ?" என்றாள்.

"ராத்திரி"

கமலா அதற்குமேல் ஒன்றும் பேசாமல் தன் காரியமாகப் போய்விட்டாள். காசிநாதன் கச்சேரிக்குச் சென்றான். பல நாளைக்கப்புறம் திடீரென்று எஜமானரைப் பார்த்ததால் எல்லா உத்தியோகஸ்தர்களும் எழுந்து நின்றுகொண்டார்கள். ஒரே ஒரு வாலிபன் மட்டும் தனது வேலையைப் பார்த்துக்கொண்டு, நாற்காலியில் அலட்சியமாய் அமர்ந்திருந்தான். புதிதாக வந்தவரைக் கண்டு எல்லா உத்தியோகஸ்தர்களும் மரியாதை செய்ததை அவன் கவனிக்கவில்லை. காசிநாதன் தானே ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு, உட்கார்ந்தான். அந்தப் புதிய மானேஜரின் பெயர் விஜய கிஷோர்தாஸ் ; பி.ஏ., பாஸ் செய்திருக்கிறான். அதிகத் திறமை யுடையவன். ஆகையால், அவனை மானேஜராக வக்கீல் விநோத பாபு அமர்த்தியிருக்கிறார்.

மானேஜர் வெகு நேரத்துக்கப்புறம் காசிநாதனின் பக்கம் திரும்பி, "நீங்கள் என்ன காரியமாக இங்கே வந்திருக்கிறீர்கள் ?" என்று கேட்டான்.

"இல்லை ; என் வேலை ஒன்றும் இல்லை. இங்கே நடக்கும் வேலையைப் பார்க்கவே வந்திருக்கிறேன்."

அப்பொழுது திவான் எழுந்து, "அவர்கள் நமது மருமகப்பிள்ளை" என்றார்.

விஜயபாபு எழுந்திருந்து அன்பாக சம்பாஷணை செய்தார்.

இச்சமயம் ஒரு வேலைக்காரன் வந்து, விஜய பாபுவிடம், "எஜமானி அழைக்கிறார்கள்" என்றான்.

விஜயபாபு போன பிறகு சிவானிடம் காசிநாதன், " இவர் யார் ?" என்று கேட்டான்.

" புதிய மானேஜர்."

" யார் வைத்தது ?"

" எஜமானி."

" ஏன் ?"

" காரியங்கள் சரிவர நடக்காதிருந்திருக்கும். அதனால்தான்."

" இப்போ இவர் எங்கே போயிருக்கிறார் ?"

" உள்ளே அறைக்குள்."

காசிநாதன் வேறு ஒன்றும் கேட்காமல், உள்ளே சென்றுவிட்டான். ஒரு அறையில் திரைக்கு முன்னால் விஜயபாபு நின்றுகொண்டிருப்பதையும் திரைக்குப் பின்னால் நின்றவண்ணம் யாரோ மெதுவான குரலில் பேசிக் கொண்டிருப்பதையும், அவன் கண்டான். அவர்கள் எதைப்பற்றிப் பேசுகிறார்கள் என்பதைக் காசிநாதன். அறிந்துகொண்டான். ஆனால், ஒன்றும் கேட்காமல், அந்தப் பக்கம் திரும்பியே பார்க்காமல், தன்பாட்டுக்கு அவன் சென்றுவிட்டான்.

மத்தியானம் கமலாவை மறுபடியும் காசிநாதன் சந்தித்தான். அவள் கம்பீரமாக " உடம்பு நன்றாய்த் தானே இருக்கிறது ?" என்று கேட்டாள். காசிநாதன் அப்படியே தலையைத் திருப்பிக்கொண்டு, " நன்றாய்த் தான் இருக்கிறது " என்று பதில் அளித்தான்.

கமலா வேறு ஒன்றும் பேசாமல் சென்றுவிட்டாள். நின்று பேசுவதற்கு அவளுக்கு இப்போது நேரமில்லை. எத்தனையோ வேலைகளிருக்கின்றன ; தானே ஜமீன் பொறுப்புக்களை ஏற்றுக் கொண்டதால், அவளுக்கு மூச்சு விடக்கூட ஒழிவில்லை.

ஒருநாள் காலையில் மானேஜரைக் காசிநாதன் அழைத்துவரச் சொன்னான். "இப்பொழுது நேரமில்லை; நேரம் கிடைத்தால் வருகிறேன்" என்று வேலைக்காரன் மூலமே அவர் சொல்லி அனுப்பிவிட்டார். அதன்பேரில் காசிநாதன் தானே கச்சேரிக்குச் சென்று, விஜய பாபுவைத் தனியாக அழைத்து, "உங்களுக்கு நேரமில்லைபோலிருக்கிறது. ஆகையால் நானே புறப்பட்டு வந்தேன். இன்று எனக்கு ஐந்நூறு ரூபாய் வேண்டும். ஓய்வு கிடைத்ததும், மேலே அனுப்பிவையுங்கள்" என்றான்.

"எதற்காக வேண்டும்?"

"இது உங்களுக்குத் தெரிய வேண்டியதில்லை."

"வேண்டியதில்லைதான். ஆனால், எஜமானியின் உத்திரவில்லாமல் நான் எப்படிக் கொடுக்க முடியும்?" என்றார் விஜயபாபு.

விஷயம் வேறு மாதிரி ஆகிவிட்டது என்று இப்போதுதான் காசிநாதன் தெரிந்துகொண்டான்; "நான் சொன்னாலே போதும். இன்னொருவரின் உத்திரவு கூட வேண்டுமா?" என்று கேட்டான்.

விஜயபாபு உறுதியான குரலில், "அல்ல. எதற்குப் பணம் கொடுப்பதையும் எஜமானி தடுத்திருக்கிறார்கள்" என்றார்.

காசிநாதன் இதன் மேல் கமலாவைச் சந்தித்து "புதிய மானேஜரை விலக்கிவிடு" என்றான்.

"யாரை?"

"புதிதாய் மானேஜர் வேலை பார்ப்பவனை."

"ஏன்? அவர் என்ன குற்றம் செய்தார்?"

"என்னிடம் சரியாய் நடந்து கொள்ளவில்லை."

"என்ன செய்தார்?"

"நான் கூப்பிட்டும் வராமல், வேலைக்காரன் மூலம் நேரமில்லை என்று சொல்லி அனுப்பிவிட்டான்."

கமலா சிரித்துக்கொண்டு, "வாஸ்தவமாகவே நேரமில்லாதிருக்கும். நேரமில்லாவிட்டால் எப்படி வருவது?" என்றாள்.

மனைவியின் முகத்தைப் பார்த்தான் காசிநாதன். "அது கூடப் பரவாயில்லை. அதன் பின், நானே நேரில் போய்ப் பணம் கேட்டதற்கு, 'எஜமானியின் உத்திரவில்லாமல் கொடுக்க முடியாது' என்று முகத்திலடித்தாற்போல் சொல்லி விட்டான்" என்றான்.

கமலா இன்னும் சிரித்துக் கொண்டே, "எத்தனை ரூபாய் கேட்டீர்கள்?" என்றாள்.

"ஐந்நூறு"

"கொடுக்க வில்லையா?"

"இல்லை. எனக்குப் பணம் கொடுக்க வேண்டாம் என்று நீ சொல்லியிருக்கிறாயா?"

"ஆமாம், இவ்விதம் பணத்தை வீணாகச் செலவழிப்பது எனக்குப் பிடிக்கவில்லை."

காசிநாதன் கல் மனம் படைத்தவன்தான். ஆனாலும் உள்ளுக்குள் ரொம்பத் துக்கப்பட்டான். கமலாவின் இம்மாதிரி நடத்தையையோ அல்லது பேச்சையோ அவன் இதற்கு முன் ஒரு போதும் கண்டதில்லை. இதைக் கண்டதும், மிகுந்த சஞ்சல மடைந்த அவன், "எனக்குக் கொடுப்பது வீண் செலவா?" என்று கேட்டான்.

"கண்டபடி ஊதாரித்தனமாய்ச் செலவழிப்பதற்குத்தான் வீண் செலவு என்று பெயர்."

"அவசியமான செலவுதான் செய்கிறேன். ஊதாரித்தனமாய்ச் செலவழிக்க வில்லை."

"என்ன அவசியச் செலவு?"

“ஒருவருக்குக் கொடுக்க வேண்டும்.”

“கொடுத்துக் கொண்டே யிருந்தால் வாங்குகிற தெங்கே? உங்களிடம் பணம் இருந்தால், கொடுத்துக் கொள்ளுங்கள்—நான் தடுக்க வில்லை.”

காசிநாதன் பேசாமலிருந்து விட்டான். இந்த வார்த்தைகள் அவன் காதில் நாராசம்போல் பாய்ந்தன. அவன் வெளியில் வந்து தனது கடிகாரம், மோதிரம் முதலியவைகளை யெல்லாம் ஐந்நூறு ரூபாய்க்கு விற்று, வைத்யநாத் நகரத்துக்கு அனுப்பினான். மேலும் கடிதத்துக்கு அடியில், “தங்கையே! இனிப் பணம் கேட்காதே, என்னிடத்தில் இதற்குமேல் ஒன்றும் கிடையாது” என்றும் எழுதி விட்டான்!

அன்றிருந்து அவன் உள்ளே செல்லவில்லை; கமலாவும் ஏனென்று கேட்க வில்லை. இவ்விதம் அநேக நாட்கள் சென்றன. ஒரு நாள் வேலைக்காரன் வந்து, “உங்களை ஒரு பிராமணன் பார்க்க வேணுமென்கிறார்” என்றான்.

காசிநாதன் ஆச்சரியத்துடன் வெளியே சென்று பார்த்தான். ஒரு கிழப்பிராமணன் தூணருகில் வந்து நின்று கொண்டிருந்தான். “தாங்களோ கீர்த்தி வாய்ந்தவர்கள். பிராமண சொத்தை அபகரிக்காதீர்கள்” என்று திடுதிப்பென்று அவன் புலம்பினான்.

காசிநாதன் பயந்து, “என்ன விஷயம்?” என்று கேட்டான்.

பிராமணன், “தங்களுக்குப் பரமாத்மா சகல பாக்கியமும் கொடுத்திருக்கிறார். ஆனால், என்னிடம் அந்தச் சிறு துண்டு நிலத்தைத் தவிர, வேறு ஒன்றுமில்லை; அதையும் நீங்கள் பிடுங்கிக் கொள்ளாதீர்கள்” என்றான். இதைச் சொல்லிக் கொண்டு வரும்போதே, அவன் கண்ணீர்விடத் தொடங்கினான்.

காசிநாதன் வியாகூலமடைந்து பிராமணனின் கையைப் பிடித்து, அவனைத் தன்னருகில் உட்கார வைத்தான். பிறகு, "எல்லா விஷயத்தையும் விவரமாகச் சொல்லுங்கள்" என்றான்.

பிராமணன் அழுதுகொண்டே, "நீங்கள் தர்மப் பிரபு! பூமி என்னுடைய தல்ல என்று உங்கள் வாயால் சத்தியம் செய்தால் போதும்; நிலத்தை விட்டு விடுகிறேன்" என்றான்.

"உங்களுடைய தல்ல என்று யார் சொல்லுகிறார்கள்?"

"இல்லையானால், பின்னே ஏன் விஜய பாபு—உங்களுடைய புதிய மானேஜர்—என் பேரில் வியாஜ்யம் தொடுத்திருக்கிறார்?"

"வியாஜ்யம் தொடுத்திருக்கிறாரா? அது எனக்குத் தெரியாது?"

பிராமணன் தனக்குவந்த சம்மனைக் காட்டி, "எப்போது வழக்குத் தொடுத்தாயிற்றோ, அப்போது நானும் எதிர் வழக்காட வேண்டியதுதான். உங்களையே சாட்சி போடப் போகிறேன். எனக்கு வேறே சாட்சி கிடையாது. நான் ஏழை; தங்களோடு வழக்காடுவது எனக்கு நல்லதல்ல. என்றாலும் கூட, நான் ஒரு பிச்சைக்காரனா யிருந்தாலும், வந்த வழக்கை நடத்தாமல் விடமாட்டேன்" என்று சொல்லி, வெளியே புறப்பட்டான்.

பிராமணன் கோபத்தோடு போவதைப் பார்த்த காசிநாதன், அவருடைய கைகளைப் பிடித்து உட்கார வைத்து, "உங்களுக்குச் சாதகமான வழியில் சமாதானத்துக்கு நான் முயற்சிக்கிறேன். அது பயன் படாவிட்டால் பிறகு உங்களிஷ்டம்போல் செய்யுங்கள்" என்றான்.

பிராமணனுக்குக் காசிநாதன் விடை கொடுத்தனுப்பிவிட்டு, விஜய பாபுவைக் கூப்பிட்டு, " அந்த நிலம் நம்முடையதல்ல ; அப்படியிருக்க பிராமணனை ஏன் வீணுகத் தொந்திரவு செய்கிறீர் ?" என்று கேட்டான்.

" அது எஜமானியின் உத்திரவு "

காசிநாதன் கோபமுற்று, " எஜமானி என்ன பிறர் பொருளைப் பிடுங்கிக் கொள்ளவா உத்திரவிட்டாள் ?" என்றுன்.

" நிலம் நமக்குச் சொந்தம்."

" இல்லை. நம்முடையதல்ல."

விஜய பாபு சிறிது நேரம் பேசாமலிருந்தான் ; பிறகு. "நான் வேலைக்காரன். உத்திரவுப்படி செய்தேன்; இன்னும் செய்வேன்" என்றுன்.

இந்த விஷயத்தைக் கமலாவிடம் சொல்ல, காசிநாதனுக்கு வெட்கமாயிருந்தது. ஆனுலும், அவன் வெட்கத்தைவிட்டு, அவளிடம் சென்று, " அந்த நிலம் உன்னுடையதல்ல ; பிறர் சொத்தைப் பிடுங்கிக் கொள்ளாதே " என்றுன்.

" நான் அதை அபகரிக்கிறேன் என்று யார் சொன்னது ?"

" யாரோ சொன்னுர்கள் ; யாரா யிருந்தாலென்ன ? அந்த நிலம் உன்னுடையதல்ல ; அவ்வளவுதானே. ஆகையால், பொய் வழக்குத் தொடுக்க வேண்டாமென்று விஜய பாபுவைத் தடுத்துவிடு."

கமலா சலிப்புடன், " விஜயபாபு நம்முடைய வேலைக்காரர். தமது வேலை என்னவென்று அவருக்குத் தெரியும். அவருடைய காரியத்தில் நீங்கள் குறுக்கிட வேண்டியதில்லை " என்றுள்.

பல நாட்களுக்குப் பிறகு அந்த வழக்கு விசாரணைக்கு வந்தது. சாட்சிக் கூண்டில் நின்று கொண்டு, காசிநாதன், "காலஞ்சென்ற மாமனார் பிரிய பாபுவின் காலத்திலிருந்து ஜமீன் காரியங்களை நான் பார்த்து வந்திருக்கிறேன். அவருக்குப்பிறகு கூட நான் வெகுகாலம் நிர்வாகம் செய்திருக்கிறேன்.........அந்த நிலம் கமலாதேவியுடையது அல்ல என்பது எனக்குத் தெரியும்" என்றான்.

தங்களுடைய வழக்குத் தோல்வி அடைந்த வருத்தத்துடன், விஜய பாபு வீடு திரும்பினார். பிரதிவாதிப் பிராமணன் தன் இரு கைகளையும் தூக்கி, காசிநாதனை ஆசீர்வாதம் செய்துவிட்டு, தனது வீட்டுக்குச் சென்றான்.

# அத்தியாயம் 9

திரைக்கு எதிரில் நின்றபடி, வழக்கு விவரங்களை தமது சொந்த அபிப்பிராயங்களையும் கலந்து, எஜமானிக்கு விஜயபாபு வியாக்கியானம் செய்யலானார். "சின்ன எஜமானரால்தான் நமது வழக்குத் தோல்வி அடைந்தது" என்று அவர் திட்டமாய்க் கூறினார். இதனால் திரைக்குள்ளேயிருந்த தாமரைக் கண்கள் அகன்று மலர்ந்தன. வெகு நேரத்துக்கப்புறம் "நீங்கள் உள்ளே வாருங்கள்; எவ்வளவோ பேசவேண்டி யிருக்கிறது" என்று அவரைக் கமலா அழைத்தாள். விஜயபாபு வெளியே வந்துவிட்டார்.

அனேக நாளைக்கப்புறம், காசிநாதன் இன்றைய தினம் சாப்பிடும்பொழுது, அவன் அருகில் வந்து கமலா உட்கார்ந்தாள். இப்பொழுது, அவள் முன்போல் உக்கிரத்துடன் இருக்கவில்லை. பூரண சாந்தத்துடனும் அமைதியுடனும் இருந்தாள். கொஞ்ச நேரம் கழிந்த பிறகு, கமலா மெதுவாக, "உள் ரகசியம் அறிந்த விபீஷணனால்தான் சொர்ணமயமான லங்காபுரி சாம்ப லாயிற்று—உங்களுக்குத் தெரியுமா?" என்றாள்.

காசிநாதன் சாப்பிட்டுக்கொண்டே, "தெரியும்" என்றான்.

"தெரியாமலிருக்குமா? அவனும் மற்றவர்களின் அன்னத்தினால்தான் ஆளானான்" என்றாள் கமலா.

காசிநாதன் ஒன்றும் பேசவில்லை.

கமலா சிறிது நேரம் பேசாமலிருந்துவிட்டு, "பிறரது சோற்றை உண்டு இவ்வளவு பெரியவர் ஆனவருக்கு—இப்பொழுதுகூட அந்நியர் இடும் உணவு இல்லாவிட்டால் பட்டினி கிடக்க வேண்டியவருக்கு—

உண்மை பேசும் விருப்பம் எதற்கு? இத்தனை கர்வம் எதற்கு? இதுதான் என் சந்தேகம்" என்றாள்.

காசிநாதன் பேசாமல் ஒவ்வொரு கவளமாக எடுத்து வாயில் போட்டுக் கொண்டிருந்தான்.

"கசாப்புக்காரன்கூட, உணவிட்டவன் கழுத்தில் கத்தி வைக்க, கொஞ்சம் யோசிப்பான்."

"கமலா!"

"தம்முடைய பெண்டாட்டியின் அன்னத்தால் வாழ்கிறவருக்கு இத்தனை வீரம், தீரம் வேண்டியதில்லை. தினம் தினம் உங்களுடைய இந்த நடத்தைகளை எல்லாம் நான் பார்க்காதிருந்தால்—"

காசிநாதன் சிரித்துக்கொண்டு, "என்னை வீட்டை விட்டுத் துரத்துகிறாயா?" என்று கேட்டான்.

"ஆம்; அப்படித்தான் செய்கிறேன்" என்று திடமாய்க் கூறினாள் கமலா.

தான் சாப்பிட்டுக்கொண்டிருந்த தட்டைத் தள்ளி வைத்துவிட்டு, கமலாவின் முகத்தை உற்றுப் பார்த்த காசிநாதன், "கமலா! நான் ஒருபோதும் உன்னிடத்தில் கடுமையான வார்த்தைகளையும் சொன்னதில்லை; நீ சொல்கிறதுபோல, இதற்கு முந்தி யாரும் என்னிடம் இம்மாதிரி சொன்னதில்லை. இன்றிலிருந்து நான் உன் சாப்பாட்டைச் சாப்பிடுவதில்லை. இதனால் நீ சுகமடைய முடியுமானால், மகராஜியாய்ச் சுகப்படு" என்று சொல்லிவிட்டு எழுந்து நின்றான்.

கமலாவும் கர்வத்துடன் நின்றுகொண்டு "உண்மை பேசுகிறவரானால் தமது சபதத்தை நிறைவேற்ற வேண்டும்" என்றாள்.

"அவசியம் நிறைவேற்றுவேன். நீ சொன்ன வார்த்தைகளே உன் ஜன்ம சத்துருவாயிருக்கும். நான்

உன்னை மன்னித்துவிட்டேன். ஆனால் ஆண்டவன் உன்னை மன்னிப்பானா ?"

கமலா இன்னும் அதிகக் கோபமடைந்தாள். "உமது சாபம் என்னை ஒன்றும் செய்துவிடாது" என்றாள்.

"அப்படியே போகட்டும். எல்லாம் கடவுளுக்குத் தெரியும். உனக்கு நான் சாபம் கொடுக்கவில்லை. தர்மத்தை அனுசரித்து நீ சுகமாக இரு என்றே ஆசீர்வதிக்கிறேன்" என்று சொல்லி, காசிநாதன் வெளியேறினான்.

வெளியில் வந்ததும், தன் வியாகரணம், சாகித்யம், தர்சன், ஸ்மிருதி முதலிய எல்லாப் புத்தகங்களையும் ஒவ்வொன்றாக அவன் கிழித்தெறிந்தான்; தன்னிடம் இருந்த பண்டங்களை எல்லாம் வேலைக்காரர்களுக்குப் பகிர்ந்தளித்தான். அப்புறம் ராத்திரியானதும், கமலாவின் அறைக் கதவைத் தட்டிக் கூப்பிட்டான். கமலா விழித்துக்கொண்டுதானிருந்தாள். ஆனால், அவள் பேசவில்லை. கதவு திறந்துதான் இருந்தது. காசிநாதன் உள்ளே பிரவேசித்தான். கமலா கண்ணை மூடிக்கொண்டு கட்டிலின்மேல் படுத்திருப்பதைக் கண்டான். அருகில் சென்று நெற்றியின்மேல் கைவைத்து, "கமலா" என்று மறுபடியும் அழைத்தான். ஒருபதிலும் இல்லை. "போகிறபோது மீண்டும் உன்னை ஆசீர்வதித்துப் போகிறேன்" என்று சொல்லி பேசாமல் வெளியில் வந்தான். காசிநாதன் சென்ற பிறகு கமலா படுக்கையிலிருந்து எழுந்து ஜன்னலருகில் போய் உட்கார்ந்தாள். உட்கார்ந்தவளுக்குப் பொழுது விடிந்ததே தெரியவில்லை. அவள் மறுபடியும் விரிப்பில் வந்து படுத்துக் கொண்டாள். மீண்டும் விழித்துக்கொண்டபோது, பொழுது கிளம்பி யிருந்தது; வீட்டில் ஒரே கலவரமாயிருந்தது. அவள் நன்கு விழிப்படையவில்லை ; அதற்குள்

ஒரு வேலைக்காரி ஓடிவந்து, "அம்மா! பெரிய ஆபத்து வந்துவிட்டதே! சின்ன எஜமானரை யாரோ கொலை செய்துவிட்டார்களே!" என்று பரபரப்புடன் புலம்பினாள்.

கொதிக்கும் எண்ணெயைக் கொணர்ந்து யாராவது தன் மேலே கொட்டினால் எப்படித் துள்ளுவார்களோ, அப்படியே கமலாவும் துள்ளி எழுந்தாள். கீழே ஓடிவந்து, "கொன்றுவிட்டார்களா? சின்ன எஜமானரையா?" என்று துடிதுடிப்புடன் கேட்டாள்.

"ஆம்" என்று யாரோ பதில் அளித்தார்கள்.

ஏறக்குறைய ஆடையற்ற நிலையில் கமலா வெளி அறைக்குள் பிரவேசித்தாள். அங்கே ரத்த வெள்ளத்தில் அசைவற்றுத் துவண்டு கிடப்பதைக் கண்டாள். தேகம் முழுதும் ரத்தமும் தூசும் படிந்திருந்தன. கண்ணிலும் மூக்கிலும் வாயிலும் ரத்தம் வழிந்து வறண்டு காணப் பட்டது. கமலா கூச்சலிட்டு மூர்ச்சை போட்டு, அங்கேயே விழுந்து விட்டாள்.

ஜமீன்தாரின் மருமகன் இருட்டில் தனியாக எங்கேயோ போய்க்கொண்டிருந்த போது, யாரோ அவனைக் கொலைசெய்து விட்டார்கள். என்று கிராமம் பூராவும் பேச்சுப் பரவிவிட்டது.

இரண்டு நாளைக்கப்புறம் காசிநாதனுக்கு நினைவு வந்தபோது, போலீஸ் இன்ஸ்பெக்டர், "பாபு! உங்களை யார் இப்படித் தாக்கினார்கள்?" என்று கேட்டார். காசிநாதன் வானத்தைப் பார்த்துக்கொண்டு கையை உயர்த்தி, அவன் என்றான்.

கிழ வேலைக்காரன் அருகில் நின்றுகொண்டிருந்தான். அவனுடைய கண்களில் கண்ணீர் பெருகியது.

இன்ஸ்பெக்டர் மறுபடியும், "பாபு! அவர்களைத் தெரியுமா?" என்று கேட்டார். காசிநாதன் தெளிவற்ற குரலில், "தெரியும்" என்றான்.

இன்ஸ்பெக்டர் மறுபடியும், "யார் அவர்கள் ?" என்றார்.

காசிநாதன் சிறிது நேரம் மௌனமா யிருந்துவிட்டு, பிறகு, "நான் பொய் சொன்னேன் ; எனக்கு அவர்களைத் தெரியாது" என்றான்.

இன்ஸ்பெக்டர் மறுபடியும் இரண்டு மூன்றுதடவை கேட்டார். ஒன்றும் பிரயோஜனப்படவில்லை. காசிநாதன் அதற்குமேல் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால், அடுத்த நாள் வேலைக்காரனைக் கூப்பிட்டு, "வைத்தியநாத், நகரில் என் சகோதரி விந்துவாசினி இருக்கிறாள். அவளை ஒரு தரம் நான் பார்க்க விரும்புகிறேன். யாரையாவது அனுப்பி அவளை நீங்கள் வரவழையுங்கள்" என்றான்.

மூன்று நாளைக்கப்புறம் விந்துவாசினியும் யகேஷ் பாபுவும் வந்துசேர்ந்தார்கள். விந்து கொஞ்சம் திடமான மனது உடைய பெண்; கமலாவைப் போலல்ல. ஆகையால் அவள் கூச்சலிடவும் இல்லை ; மூர்ச்சை அடையவுமில்லை. கண்ணீரை மட்டும் துடைத்துக் கொண்டு, கலக்கம் நிறைந்த குரலில், "அண்ணா ! உன்னை யார் இப்படிச் செய்தது ?" என்று கேட்டாள்.

"அது எனக்கெப்படித் தெரியும் ?"

"யார் பேரிலாவது உனக்குச் சந்தேகமிருக்கிறதா ?"

"அதைக் கேட்காதே, அம்மா !"

விந்து வாய் பேசாமல், காசிநாதனின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

காசிநாதன் இவ்வளவு பெரிய காயத்திலிருந்து குணமடைந்து பிழைக்க மாட்டான் என்றே எல்லோரும் நினைத்தார்கள். அபாயமும் கொஞ்சம் கொஞ்சமாக அருகில் வரத் தொடங்கியது. அன்று இரவு வெகுநேரம் வரையிலும் ஜுர வேகத்தில் புரண்டு கொண்டு, "இந்த வேலை நீ செய்ததில்லையா ? சொல்லு, கமலா !" என்று அவன் கத்தினான்.

விந்து தமையனின் முகத்தோடு முகம் வைத்து, “ என்ன சொல்கிறாய், அண்ணா ?” என்றாள்.

காசிநாதன் விந்துவைக் கமலா என்று நினைத்து, அவளுடைய கழுத்தில் கை போட்டு, கருணை மிகுந்த குரலில், “ நான் இறந்தும்கூட நீ சுகமடைய முடியாது—அது போகட்டும் ; இது உன்னால் நடைபெற வில்லையா? இதை மாத்திரம் ஒரே ஒரு தரம் சொல்லு ” என்றான்.

# அத்தியாயம் 10

சிறிது நேரம் சுய நினைவு, சிறிது நேரம் நினை விழந்த மயக்க நிலை—இப்படியாக மாறி மாறி இரண்டு நாள் வரையில் கமலா தத்தளித்தாள். அவள் விஷயத்தில் டாக்டர்களுக்கு உள்ளுக்குள் ரொம்பப் பயம். ஆகையால், அவர்கள் சொன்ன பிரகாரம் மிகுந்த ஜாக்கிரதையுடன் அவளைச் சுற்றி அநேகம் பேர் இருந்தார்கள். இடைவிடாமல் இரண்டு நாள் சிகிச்சை செய்த பிறகு அவளுக்குத் தன் நினைவு வந்தது. அவளைத் தூக்கி உட்கார வைத்தார்கள்.

நன்றாய்க் கண்ணை விழித்துப் பார்த்தாள். தான் இதுவரையிலும் யாருடைய மடியில் தலை வைத்திருந் தாளோ அவள் புதிதாக இருந்தாள்.

“நீ யார் ?” என்று கமலா கேட்டாள்.

“நான் உன் கணவனின் சகோதரி.”

கமலா வெகு நேரம் வரையிலும் விந்துவின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அதன் பிறகு அறையிலிருந்த எல்லோரையும் வெளியே போகும்படி கையாலேயே சமிக்ஞை காட்டி விட்டு, மெதுவாக, “நான் எத்தனை நேரம் இப்படி மூர்ச்சையா யிருந்தேன், அக்கா ?” என்று கேட்டாள்.

“முந்தாநாள் காலையில் மூர்ச்சை போட்டு விழுந்தாய் ; அப்புறம் நினைவு வரவேயில்லை.”

முந்தாநாள் ! கமலா திடுக்கிட்டாள். அதன் பிறகு, தலை குனிந்து, சிலைபோல உட்கார்ந்து கொண் டிருந்தாள். வெகுநேரம் வரையிலும் அவளுடைய உடம்பில் ஒருவித அசைவையும் காணாததால், விந்து

பயமடைந்து அவளது வலது கையைப் பிடித்துக் கொண்டு, "கமலா!" என்று கூப்பிட்டாள். கமலா தலைநிமிராமல் பதில் அளித்தாள். "பயப்படாதே, விந்து! இனி நான் மயக்கமடைய மாட்டேன்" என்றாள்.

தன்னைச் சுய நினைவுடன் வைத்துக்கொள்வதற்கு உள்ளுக்குள் கமலா சிரமப்பட்டு முயற்சிக்கிறாள் என்பதை விந்து அறிந்து கொண்டாள்.

இதனால் விந்து தைரியமடைந்து, பேசாமல் உட்கார்ந்திருந்தாள். அப்புறம் கொஞ்ச நேரம் கழிந்த பிறகு, கமலா பேசத் தொடங்கினாள்: "நீ இரண்டு நாளாக என்னை வைத்துக்கொண்டு இப்படியே உட்கார்ந்திருந்தாயா, விந்து? என்னால் முடியாதே" என்றாள்.

அவள் வார்த்தையை விந்து நன்றாய்ப் புரிந்து கொள்ளவில்லை: "ஏன் முடியாது; கமலா? நீ ஒன்றும் அந்நியளல்லவே? எங்களைப் பார்த்ததில்லை. இருந்தாலும், நீயும் அண்ணாவைப்போலவே எனக்குச் சொந்தம்தான். அவருக்குப் போலவே உனக்கும் சேவை செய்ய வேண்டியது என் கடமை, கமலா! உனக்குத் தெரியாது; நான் வந்ததிலிருந்து இந்த இரண்டு நாளும் எப்படிக் கழிந்ததோ, அது பகவானுக்குத்தான் தெரியும். ஒரு தரம் அண்ணனிடம் போவேன்; அப்புறம் உன்னிடம் வருவேன். அண்ணாவின் அருகில் இருக்கும்போது, உன்னைப்பற்றி மனது துடிக்கும்; உன்னருகிலிருக்கும் போது—அண்ணாவைப் பற்றி மனம் திகிலடையும். இன்று சாயங்காலத்திலிருந்து, அவருக்குக் கொஞ்சம் ஜ்வரம் தணிந்தது. அவர் நன்றாகத் தூங்குவதால், நான் உன்னிடத்தில் ஸ்திரமாக உட்கார்ந்திருக்க முடிகிறது. இந்தக் கண்டத்திலிருந்து அண்ணா பிழைத்துக் கொள்வான் என்று யாருக்கும் நம்பிக்கை யில்லாம லிருந்தது. ஏதோ, தெய்வச் செயல்!" என்றாள்.

"பிழைத்துக்கொண்டாரா ?" என்று ஆவலுடன் கேட்டாள் கமலா.

விந்து தலையை அசைத்து, " ஆம், பிழைக்காமலென்ன ! இனிப் பயப்பட வேண்டியதில்லை. ஜுரம் இறங்கிவிட்டது என்று டாக்டர்களே சொல்லுகிறார்கள் " என்றாள்.

கமலாவின் முகம் திடீரெனப் பிரகாசித்து, பிறகு சவம்போல் மாறியது. அவளுடைய உடல் ஒரு முறை நடுங்கியது. அடுத்த கணமே அவள் மீண்டும் நிலை விழுந்து, விந்துவின் மடியில் சாய்ந்தாள்.

விந்து சத்தமிட்டு யாரையும் கூப்பிடவில்லை. கமலாவின் தலையைத் தன் மடி மீது வைத்துக்கொண்டு, மௌனமாக விசிறினாள். அவளிடம் இயற்கையாக எவ்வளவு தைரியமிருக்கிறதென்னும் சோதனை, அவளுடைய கணவன் நோயுற்றிருந்த போது தெரிந்து இருக்கிறது. சாவு அவள் கணவனின் தலைமாட்டில் வந்து உட்கார்ந்திருந்தது ; அப்போது கூட அது அவளை அசைக்க முடியவில்லை ; விந்து இப்பொழுது கமலாவின் இந்த அற்ப மூர்ச்சைக்காக ஏன் கலங்குவாள் ? சிறிது நேரத்திற்கப்புறம், கமலா கண் திறந்து தான் எங்கிருக்கிறாள் என்று பார்த்தாள். இதன் பிறகு, விந்துவின் மடியில் குப்புறப் படுத்துக்கொண்டு மனம் குழைந்து அழத் தொடங்கினாள்.

அவள் பெருக்கிய கண்ணீர், விந்துவின் மடியிலேயே உறையத் தொடங்கியது ! அதில் ஒரு சொட்டுக் கண்ணீர் கூட வெளியில் யாருக்கும் தெரியாது. வெளியில் அமைதியான இரவின் அந்தகாரம் பரந்து சூழ்ந்தது. உள்ளே குளிர்ந்த தோர் அறையில் இருந்த இந்த இரண்டு யுவதிகளில் ஒருத்தி, தனது உருகும் வெள்ளத்தின் பூரண ஜ்வாலையை மற்றவளின் ஆழ்ந்த அமைதியான மடியில் மௌனமாகப் போக்கிக் கொண்டிருந்தாள்.

கொஞ்சம் கொஞ்சமாகச் சாந்தமடைந்து, கமலா தன் கணவனைப் பற்றிக் கேட்டாள். ஆனால், அவள் தானே நேரில் சென்று பார்க்க வேண்டும் என்ற ஆவலை ஏன் வெளிப்படுத்தவில்லை என்பதை விந்து எவ்வளவோ யோசித்தும் அறிந்துகொள்ள முடியவில்லை. ஒரு சமயம் பெரிய மனிதர் வீட்டில் இம்மாதிரி தான் பழக்க வழக்கங்கள் இருக்குமோ என்று கூட அவள் நினைத்தாள். பணிவிடையின் பொறுப்பை யெல்லாம் வேலைக்காரர்களிடமே விட்டு ஒதுங்கி நின்று, தகவல் மட்டும் தெரிந்துகொள்வதாக்கும் என்றும் எண்ணினாள். திடீரென்று கமலா, "சரி அக்கா! உன் அண்ணாவுக்கு நினைவு வந்தபோது என்னைப் பற்றி ஒரு தரம்கூட அவர் விசாரிக்கவில்லையா" என்று வினவினாள்.

"ஒரு தரம் கேட்டார்" என்றான் விந்து. கமலா ஒன்றும் பேசாமல் உற்சாகத்துடன், வியாகூலக் கண்களோடு விந்துவின் முகத்தையே பார்த்தாள்.

விந்து சிறிதுநேரம் பேசாமலிருந்து விட்டு, "நினைவு வந்ததும் அண்ணா என்னை நீ என்று நினைத்துத் தழுவிக் கொண்டு, பலமாக, "இந்த வேலை நீ செய்ததில்லையா? சொல்லு, கமலா! நான் இறந்தால் கூட நீ சுகமடைய முடியாது. இது உன்னால் நடைபெற வில்லையா? இதை மாத்திரம் ஒரே ஒரு தரம் சொல்லிவிடு, கமலா!" என்றார்" என்று சொன்னாள்.

"அதற்கப்புறம்?"

"எனக்கொன்றும் தெரியாது. எதற்காக உன்னை இப்படிக் கேட்டாரோ!"

"அவர் என்ன அறிய விரும்புகிறார் என்பது எனக்குத் தெரியும் விந்து!" என்று சொல்லிவிட்டு கமலா நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

கமலாவின் கரத்தை விந்து பிடித்துக் கொண்டு, "நீ அந்த அறைக்குள் போகாதே, தங்காய்!" என்றாள்.

"ஏன், ஏன் போகக் கூடாது?"

"டாக்டர் தடுத்திருக்கிறார்; உனது உயிருக்கு ஆபத்து வந்து விடுமாம்."

"எனது ஆபத்து என்னைவிட டாக்டருக்கு அதிகம் தெரியுமோ, அக்கா. அவரிடம் நான் போகிறேன். தூக்கம் கலைந்த பிறகு, அவர் மறுபடியும் இந்தக் கேள்வியைக் கேட்டால், நான் அதற்குப் பதில் சொல்ல வேண்டும்!" என்று கூறிய கமலா, விந்துவின் கையைப் பிடித்துக் கொண்டு, தழதழத்த குரலில், "இல்லா விட்டால், ஆயுள் உள்ள அளவும் நான் தலைநிமிர்ந்து நடக்க முடியாது, அக்கா! என்னைத் தயவுசெய்து அவரிடம் போகவிடு" என்றாள்.

இதற்குப் பிறகு, தன் மனதுக்குள்ளாகவே, "ஆண்டவா! இதுவரையிலும் என் மஞ்சளைக் (தாலி) காப்பாற்றி வந்தாய். இப்போது பொய்யை நிஜமென நிர்ணயம் செய்து அதைப் பிடுங்கிக்கொண்டு போய் விடாதே! எனக்குரிய தண்டனை எங்கே போய் விட்டது? அதைத்தான் அப்படியே வைத்திருக்கிறாயே! எந்தப் பலத்தினால் உன் கடூரமான தண்டனை அனைத்தையும் நான் சிரித்த வண்ணம் தலையால் தாங்க முடியுமோ, எனது அந்தப் பலத்தை மாத்திரம் பறித்து விடாதே! இது போதும், பிரபுவே!" என்று சொல்லிக் கொண்டாள்.

கணவனின் அறைக்குள் நுழைந்ததும், கமலா மனம் தளராமலிருக்க முடியவில்லை. இரண்டு நாள் உணவற்றிருந்த அவளது மெல்லிய சரீரமும், அதைவிட அதிகப் பலவீனமடைந்த மூளையும் சுழன்றன. புருஷனின் காலடியில் அவள் போய் விழுந்தாள். காசிநாதன் அப்போது விழித்துக் கொண்டுதான் இருந்தான். யாரோ காலடியில் விழுந்ததாக அவனுக்குத் தெரிந்தது. ஆனால், எழுந்து பார்ப்பதற்கு அவனிடம்

'தெம்பு' இல்லை. ஆகையால், அவன் படுத்துக்கொண்டே " யார், விந்து ?" என்று கேட்டான்.

"வேறு யாரும் இல்லை, அண்ணு! கமலாதான்" என்ருள் விந்து.

" கமலாவா! நீ இங்கே ஏன் வந்தாய், கமலா ?"

காசிநாதனின் தலைமாட்டில் விந்து உட்கார்ந்து கொண்டு, "இவள் தன்னைத்தானே சமாளித்துக்கொள்ள முடியவில்லை; மயக்கமடைந்து விழுந்திருக்கிருள், அண்ணு!" என்ருள்.

காசிநாதன் பேசவில்லை. விந்து மறுபடியும், " நான் இன்று இரவு வரவேண்டாமென்று தடுத்தேன். இரண்டு நாளைக்கப்புறம் இப்பொழுதுதான் அவளுக்குப் பிரக்ஞை வந்தது. அப்படியிருக்க, எவ்விதம் இந்த அறைக்குள் வந்து, தன்னை அவள் அடக்கிக்கொள்ள முடியும் ? இது எனக்கு நன்ருய்த் தெரியும் " என்ருள்.

கணவனின் கால்களுக்கிடையே, தனது முகத்தைப் புதைத்துக்கொண்டு, கமலா அவ்விதமே வெகுநேரம் படுத்திருந்தாள். அவளது சூடான கண்ணீர் வெள்ளத்தைத் தன் குளிர்ந்த கால்களினுல் காசிநாதன் உணர்ந்தான். இதனுல் அவன் மெள்ள மெள்ள, " ஆம், அவள் இங்கே வராதிருந்திருப்பதே நல்லது " என்ருன்.

கமலாவைப் பார்க்கப் பார்க்க, விந்துவின் கண்களில் நீர் நிறைந்தது. கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, "நல்லதாய்த்தானிருந்திருக்கும். ஆனுல் அப்படி யாராவது இருக்க முடியுமா, அண்ணு ? நீ குணமடைந்து விட்டாய். இந்த இரண்டு நாளையும் இவள் எவ்விதம் கழித்தாள் ? அது எனக்கும் கடவுளுக்கும்தான் தெரியும் ; அவளுக்கேகூடத் தெரியாது " என்ருள்.

காசிநாதன் கண்ணை மூடிக்கொண்டு, தன் வெளித் திருஷ்டியையெல்லாம் கண நேரத்தில் உள்ளே திருப்பி, உலகத்தின் சகல ஜீவராசிகளிடத்திலும் வசிக்கும்

அந்தர்யாமியின் பாதத்திலே ஒரு கேள்வியை ஸமர்ப்பித்துப் பதிலை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அதன் பிறகு கண்ணைத் திறந்து, "என் உயிருக்கு இனிப் பயமில்லை, கமலா! எழுந்து உட்கார்" என்றான்.

"அண்ணா! என்னிடம் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லவே கமலா வந்திருக்கிறாள்" என்றாள் விந்து.

காசிநாதனின் உலர்ந்த உதடுகளில் புன்சிரிப்புத் தவழ்ந்தது. "இனி யாருக்கும் ஒரு பதிலும் அவள் சொல்ல வேண்டியதில்லை, விந்து! இந்த இரண்டு நாளாக மூர்ச்சையாய்க் கிடந்திருக்கிறாளே, அதிலிருந்தே எனக்குப் பூராப் பதிலும் கிடைத்துவிட்டது" என்று சொல்லி, தன் இடது கையை ஊன்றி, அவன் எழுந்து உட்கார்ந்தான். பிறகு, வலது கையால் கமலாவின் முகத்தைத் தூக்குவதற்கு முயற்சித்துக்கொண்டு, "கமலா!" என்று அழைத்தான்.

கமலா ஒன்றும் பேசவில்லை. அவள் அப்படியே அசையாமல் அவனுடைய காலின்மேல் முகத்தை வைத்துக்கொண்டிருந்தாள். அவளுடையகண்களிலிருந்து கண்ணீர் வெள்ளம் பெருகிக்கொண்டே இருந்தது.

"விந்து" என்று அழைத்தான் காசிநாதன்.

விந்து கவலையுடன், "நீ தூக்காதே, அண்ணா! டாக்டர் சொல்லிப்போயிருக்கிறார். அப்புறம்—"என்றாள்.

காசிநாதன் புன்சிரிப்புடன், "டாக்டர் என்ன சொன்னாலும், இனிப் பயப்பட வேண்டியதில்லையென்று நான் உங்களுக்குச் சொல்கிறேன். இந்தக் கண்டத்திலிருந்து நீங்கள் என்னைக் காப்பாற்றி விட்டீர்கள்" என்றான்.

அதன் பிறகு காசிநாதன், கமலாவின் கலைந்திருந்த கூந்தலைச் சிறிது நேரம் கோதிக் கொண்டிருந்து விட்டுப் படுத்துக் கொண்டான்.

